எல்லோரும் எப்போதும்
விரும்பும் இன்பக்கதையின்
இனிய கலைச்சித்திரம்

ஜுபிடரின்

# கன்னியின் காதலி

ராம்நாத் சேகர்
தயாரிப்பு
டைரக்‌ஷன் ராம்நாத்




ராஜதானி பூராவும் நடைபெறுகிறது

சென்னை - பாரகன் & கிரவுனில் தினசரி மூன்று காட்சிகள்



# காட்ஸ்வால்

அவர்கள் தேக சீதோஷ்ணத்தை சமப் படுத்துகிறது.



**உஷ்ணவேளையில்
அவர்களை
குளுமையாகவும்
குளிர்ந்த வேளையில்
கதகதப்பாகவும்
வைத்திருக்கிறது!**

தங்கள் குழந்தைகளை உஷ்ணவேளையிலும் சரி, விளையாட்டுச் சமயங்களிலும் சரி, குளுமையாக வைத்திருப்பதுடன் தேகப் பயிற்சிக்குப் பின் அல்லது குளிர்ந்த வேளையில் அவர்களுக்கு ஜலதோஷம் வராமல் காப்பாற்றவும் கூடியதோர் துணியைத் தான் எல்லாத் தாய்மார்களும் கோருவது. இதே இப்புதிய ஜவுளி அவர்கள் கோரிக்கையை நிறைவேற்றுகிறது!

காட்ஸ்வால் இவ்விதவித பாதுகாப்பும் அளிப்பது அதன் அரிய நெசவுத்தன்மை காரணமாகத் தான். அதிலுள்ள ஆயிரக் கணக்கான சிறு துவாரங்களின் மூலம் உடம்போடு சேர்ந்தாப்போல் காற்றோட்டம் எப்போதும் ஏற்பட்டு தேக சீதோஷ்ணம் சம நிலையில் நிறுத்தப் படுகிறது. வியர்வையும் எளிதில் உலர்கிறது.

காட்ஸ்வால் அணிவதற்கு சுகமாகவும், அதி மென்மையான சரீரங்களுக்கும் மிருதுவாகவும் இருப்பது தவிர, பார்வைக்கும் அழகுதான். தாய்மார்கள் தங்களுக்கும் தங்கள் கணவர்களுக்கும் காட்ஸ்வால் ஆடையணிகளை கட்டாயம் விரும்புவர். அநேகவித வர்ணமான கெட்டிச்சாய நிறங்களிலும், கோடுகளுடனும், செக் மோஸ்தரிலும் கிடைக்கும்.

சலவைக் குறிப்புகள்: உலர் துணிமணிகளைப் போன்றே வெதுவெதுப்பான ஜலத்தில் சோப்புச் சில்லுகள் அல்லது வாஷிங் சோப்பால் சலவை செய்யவும்






தயாரிப்பவர்கள்:

## தி பெங்களூர் மில்ஸ்

தி பெங்களூர் உலன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட். பெங்களூர் ஸிடி.

ஏஜண்டுகள், காரியதரிசிகள், பொக்கிஷதார்கள்,
பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்.

திட ஆரோக்கியத்தின்

# மகிழ்ச்சியுடன்

விளங்குகிறான்




# பொட்டன்ஸென்

நீடித்த தேகவன்மைக்கு

கார் & கோ., 2, தம்பு செட்டித் தெரு. மதருஸ்

| |
|---|
| 30 பில்லைகள் கொண்ட ஒரு பெட்டி விலை ரூ 4-14-0 வி. பி. பி. மூலம் ரூ 5-5-0. |

---

## கொள்ளேகாலம் பெங்களூர் & பனாரஸ்

# புடவைகள்

நவீன வர்ணங்களிலும், டிசைன்களிலும் மனதிற்குப் பிடித்து பொறுக்கி எடுத்த ரகங்களில் தொழிற்சாலையிலிருந்து புத்தப் புதிதாக வந்துள்ளன

ஒரு முறை விஜயம் செய்யுங்கள்

# இந்தியன் ஆர்ட் பேலஸ்

(உயர் ரக கொள்ளேகாலம் & பங்களூர் கேட்டிச் சாய புடவைகள் & பனாரஸ் புடவைகள் சொந்தத் தறிகளில் தயாரிப்பவர்கள்)

427, தங்கசாலைத் தெரு (சௌகார்பேட்டை) மதருஸ்

டெலிபோன்: 2676 தலைமை ஆபீஸ்: பனாரஸ்




## உழைப்பில் பெருமை

ஜெட் ஆகாய விமானத்தைத் தயாரிக்க அநேக வருஷ பொறுமையான ஆராய்ச்சியும், பரிசீலனையும் வேண்டியிருந்தது. அதன் தயாரித்தவர்களும், அதைச் செலுத்தும் விமானியும் இன்று அதன் உழைப்பில் பெருமை கொள்கிறார்கள்.

அதேமாதிரி கொஞ்சம் குறைந்த அளவில் தினசரி வாழ்க்கைக்கு அவசியமான சாதனங்களின் உழைப்பிலும் நமக்குப் பெருமை ஏற்படுகிறது. உதாரணமாக எங்கள் வாட்சுகளின் உழைப்பில் எங்களுக்குப் பெருமை. ஒவ்வொரு வாட்சும் அனுபவமுள்ள வேலைப்பாடும் மிகச் சிறந்த பொருள்களும் அடங்கியது.

நம்பகத்திற்கும், உறுதிக்கும், 75 ஆண்டுகளுக்கு மேலாக இந்தியா முழுதும் வெஸ்ட் என்டு வாட்ச் கம்பெனி புகழ் பெற்றுள்ளது.



ரீஜெண்ட் ஆல்-ஸ்போர்ட்ஸ்
வெஸ்ட் என்டு பேடெண்ட்
எவர்பிரைட் ஸ்டீல் ரூ. 195/-

வெஸ்ட் என்டு வாட்ச் கம்பெனி, பம்பாய் - கல்கத்தா

**WEST END WATCH CO.**

BOMBAY CALCUTTA

# கல்கி
## பொருளடக்கம்

மலர் 9 இதழ் 7 | செப்டம்பர் 18 | விரோதி ஹு புரட்டாசி 3உ



'கல்கி'யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும் சம்பவங்களும் கற்பனையே

உலகம் எத்தனையோ விதத்தில் அபிவிருத்தி அடைந்திருக்கிறது; அபிவிருத்தி அடைந்து வருகிறது. ஆயினும் கலைத்துறையிலும் இலக்கியத் துறையிலும் பழைய காலத்தவர்கள் சாதித்ததைக் காட்டிலும் இந்தக் காலத்தவர்கள் சாதித்து விடவில்லை. இனி வருகிறவர்கள் சாதித்து விடுவார்களா என்பதும் சந்தேகந்தான். இராமாயணத்தையும் மகாபாரதத்தையும் போன்ற இதிகாசக் கதைகளை இந்த நாளில்,—இவ்வளவு கல்வியும் கலையும் முன்னேறியிருக்கும் நாளில்,—யாராவது கற்பனை செய்ததுண்டா? காளிதாஸனுடைய நாடகங்களையும் ஷேக்ஸ்பியரின் நாடகங்களையும் போன்ற நாடகங்களை இனி யாராவது எழுதப் போகிறார்களா?



கதை இலக்கியத் துறையில் "அராபியக் கதைகள்" அவ்வளவு புகழ் வாய்ந்தவை. பக்தாத் நகரம் செல்வ வளத்திலும் கலை வளத்திலும் உலகத்திலேயே நிகரற்ற மேன்மையை அடைந்திருந்த காலத்தில் அராபியக் கதைகள் கற்பனை செய்யப்பட்டன. அது முதல் இன்று வரையில் உலகத்திலுள்ள எல்லா பாஷைகளிலும் மொழி பெயர்க்கப் பட்டிருக்கின்றன. கோடிக்கணக்கான மக்கள் அந்தக் கதைகளைப் படித்து ரஸித்திருக்கிறார்கள்.

அராபியக் கதைகளில் மிகவும் ரஸமான கதை ஒன்றைத் தமிழ்ப்படுத்தி இந்த இதழிலிருந்து வெளியிடுகிறோம். தமிழ்ப்படுத்தியவர் தமிழ் நாட்டின் பிரபல எழுத்தாளரில் ஒருவரான ஆசிரியர் ஸ்ரீ ரா. நாராயணய்யங்கார் அவர்கள். "ஐம்பது ராஜ குமாரர்கள்" என்னும் கதை பாப்பா மலர்ப் பகுதியில் வெளியாகியிருந்தாலும் பெரியவர்களும் படித்து ரஸிக்கக்கூடிய கதைதான். கதையில் வரும் ஒரு முக்கியமான கட்டத்தின் சித்திரம் நமது அட்டையை அலங்கரிக்கிறது.




மலர் 9 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 7

# என்ன சேதி?

## சென்னைக்கு முதல் ஸ்தானம்

இரண்டு மூன்று வருஷங்களாக இந்த மாகாணத்திலே செப்டம்பர் மாதத்தில் ஒரு நெருக்கடி ஏற்படுவது வழக்கம். இரண்டு வருஷங்களுக்குமுன் அந்த நெருக்கடி உச்ச நிலையை அடைந்தது. அதைச் சமாளிக்க சென்னை சர்க்கார் திணறிப் போனார்கள். உதவிபுரியும்படி மந்திரிகள் ஊர் ஊராக ஓடி ஜனங்களைக் கேட்டுக் கொண்டார்கள். அந்த நெருக்கடி மந்திரி சபையையே கலக்கி விட்டது.

1947 செப்டம்பர் மாதத்திலே குறிப்பிட்ட அளவு நெல் கொள் முதல் ஆகாவிட்டால் பல இடங்களில் ரேஷன் முறை சீர்குலைந்து எங்கும் பஞ்சம் உண்டாகலாம் என்ற பயங்கரமான நிலைமை ஏற்பட்டது. அதைக் குறித்து மந்திரிகள் தினசரி ஜனங்களை எச்சரித்து வந்தனர். இறுதியில் மந்திரிகளின் விடா முயற்சியினாலும் அவர்களே நேரில் நெல் கொள்முதல் கைங்கரியத்தில் ஈடுபட்டதாலும் சென்னை மாகாணம் தட்டுத்தடுமாறி அந்த நெருக்கடியைச் சமாளித்தது. ஆனால் இந்த வருஷம் அத்தகைய நெருக்கடி எதுவும் ஏற்படாதது சென்னை மந்திரிகளின், சென்னை மாகாண மகா ஜனங்களின் அதிர்ஷ்டமேயாகும்.

எனினும், இதிலிருந்து சென்னை மாகாணம் அரிசி சம்பந்தப்பட்ட வரையில் சுய தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளக் கூடிய நிலையை அடைந்து விட்டது என்று நினைப்பதற்கில்லை. 1948-49-ம் வருஷக் கொள்முதல் திட்டம் பூரண வெற்றியடைந்திருப்பதே நெருக்கடி ஏற்படாததற்குக் காரணம். நெல் களஞ்சியம் உள்ளவர்கள் பதுக்கி வைக்காமல் கொடுத்துவிட்டதால், இந்த வருஷம் போட்டிருந்த திட்டத்தில் இதற்குள்ளேயே சுமார் தொண்ணூறு சதவிகிதம் கொள் முதலாகிவிட்டது. சென்னை மாகாண மிராசுதார்களின் தயாள குணத்துக்கும் தாராள புத்திக்கும் இதைக் காட்டிலும் வேறு உதாரணம் என்ன வேண்டும்? இதன் காரணமாக இந்தியாவிலேயே கொள்முதலில் சென்னைதான் முதல் ஸ்தானம் வகிக்கிறது என்று உணவு டைரக்டர் ஜெனரல் பாராட்டியிருக்கிறார். சென்னை மாகாணத்திலே தஞ்சாவூர் ஜில்லா முதலாவது ஸ்தானத்தைப் பெற்றுத் தன் பெருமையை நிலைநிறுத்திக் கொண்டிருக்கிறது. பஞ்சம், பற்றாக் குறை, பதுக்கல், பாதக விலை, பிளாக் மார்க்கெட் என்ற வார்த்தைகள் இடைவிடாது ஜனங்களின் காதைத் துளைத்து வரும் இக் காலத்தில் சென்னை மாகாணத்தின் சிறந்த உதாரணத்தை எவ்வளவு பாராட்டினாலும் தகும் அல்லவா?

## பிரிட்டிஷ் ஆட்சியின் ஆவி!

பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவிலிருந்து மறைந்து விட்டது. எனினும் அந்த ஆட்சியின் ஆவி இந்தியாவை விட்டுச் செல்ல மனமின்றி இன்னும் இங்கு அலைந்து கொண்டிருக்கிறதோ என்றே எண்ண வேண்டியிருக்கிறது! ஏனென்றால் பிரிட்டிஷாரின் ஆட்சிக் காலத்தில் அந்த அவல ஆட்சியைக் கண்டித்து ஒரு வார்த்தை கூடக் கூறத் துணியாதவர்களும், கூற மனமில்லாதவர்களும் இன்று சுதந்திர சர்க்காரை நிர்வகிக்கும் காங்கிரஸை வெகு ஆக்ரோசத்துடன் தாக்குகிறார்கள். இத்தகையோரின் போக்கையாவது ஒருவாறு புரிந்து கொள்ளலாம். ஆனால், பிரிட்டிஷ் ஆட்சி முறையை இடைவிடாது தாக்கி, அதன் பலனாகக் கஷ்ட நஷ்டங்களை அடைந்தோர் கூட இப்போது காங்கிரஸைத் தாக்கவும், தேசத்தின் ஒற்றுமையைக் குலைக்கவும், தீராத கட்சிப் பிணக்குகளைச் சிருஷ்டிக்கவும் முற்பட்டிருப்பதன் விபரீதத்தைத் தான் புரிந்து கொள்ள முடியவில்லை.

முப்பது கோடி இந்திய மக்களுக்குப் பிரதிநிதிகளாகவும் தனிப் பெரும் தலைவர்களாகவும் விளங்கும் மூவர் (நேரு—பட்டேல்—பட்டாபி) அளித்த தீர்ப்புக்குப் பின், ஆந்திர மாகாணப் பிரிவினைப் பிரச்னை திருப்திகரமாகத் தீர்ந்துவிடும் என்று எல்லாரும் கருதினார்கள். ஆனால்,

அதற்குப் பிறகுதான் அந்தப் பிரச்னை எல்லோருக்கும் அதிக தலைவலியைக் கொடுக்க ஆரம்பித்திருக்கிறது! ஆந்திரப் பிரமுகர்கள் அடிக்கடி கூட்டம் கூடி கர்ஜிப்பதும், புது டில்லிக்கு மகஜர்கள் அனுப்புவதும், பிரதம மந்திரியைப் பேட்டி காண்பதும் அதிகமாகி விருக்கின்றன. மகாத்மா காந்தியின் ஜயந்தி தினமான அக்டோபர் இரண்டாம் தேதிக்குள் ஆந்திர மாகாணப் பிரிவினைக்கு வழி செய்யாவிட்டால் சத்தியாக்கிரகம் செய்யப்போவதாக ஆந்திர மகாசபை ஆர்ப்பாட்டம் செய்கிறது.

## மூன்று திருத்தங்கள்

எனினும், மற்ற ஆந்திர மாகாணப் பிரிவினை வாதிகளைப்போல் ஆந்திரகேசரி பிரகாசம் காரு கண்டனத் தீர்மானங்களை அனுப்புவதுடன் நின்றுவிட விரும்பவில்லை. காரியத்தில் தீவிரமாக இறங்க முற்பட்டிருக்கிறார். ஆந்திர மாகாண அமைப்பு பற்றி அரசியல் நிர்ணய சபையில் மூன்று திருத்தங்கள் கொண்டுவரப் போவதாக அவர் அறிவித்திருக்கிறார்.

கூவம் நதியை எல்லைக் கோடாகக் கொண்டு சென்னை நகரை வடசென்னை என்றும் தென் சென்னை என்றும் பிரிக்க வேண்டும். வட சென்னையும் வடக்கேயுள்ள பதினொரு ஜில்லாக்களும் ஆந்திர மாகாணத்தைச் சேர வேண்டும்.—இது தான் முதலாவது திருத்தம்.

அவ்விதம் இல்லாவிடில், ஆந்திர தேசத்தைச் சேர்ந்த பதினொரு ஜில்லாக்களைக் கொண்டு ஆந்திர மாகாணத்தை அமைக்க வேண்டும். சென்னை நகரைத் தவிர மீதியுள்ள ஜில்லாக்கள் தமிழ் மாகாணத்துடன் சேரவேண்டும். சென்னை நகரை மாத்திரம் டில்லியைப் போன்று தனி மாகாணமாக அமைக்கவேண்டும்.—இது தான் இரண்டாவது திருத்தம்.



அல்லது சென்னை மாகாணத்தை இரண்டு மாகாணங்களாகப் பிரிக்க வேண்டும். ஒவ்வொரு மாகாணத்துக்கும் தனியாகச் சட்டசபை, மந்திரி சபை முதலியன இருக்க வேண்டும். ஆனால், சென்னை நகரமும் சுற்றுப்புறப் பிரதேசங்களும் அடங்கிய ஜில்லா இரண்டு மாகாணங்களுடைய கூட்டு நிர்வாகத்தின் கீழ் இருந்து வர வேண்டும்:—இதுதான் மூன்றாவது திருத்தம்.

"குழந்தையைப் பங்கு போட வேண்டும். இல்லாவிடில் அது ஒருவருக்கும் வேண்டாம். ஆனால், பெற்றவள் அதை எடுத்துக் கொண்டு போவதை ஒருகாலும் சகிக்க மாட்டேன்" என்று வாதாடினாளாம் ஒருத்தி! ஸ்ரீ பிரகாசம் காருவின் திருத்தங்கள் மேற்படி விநோதக் கதையையே ஞாபக மூட்டுகின்றன!

## ராணாவின் புனர்ஜன்மம்

சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் ரஜபுத்திர மன்னர் ராணாவின் வம்சத்தில் உதித்த வீரர்கள் புரிந்த பராக்கிரமச் செயல்கள் இந்திய சரித்திரத்திலும் மக்களின் மனதிலும் அழியாத இடம் பெற்றிருக்கின்றன. எனவே, அந்த வீரர்களின் பிரதாபத்தை அறியாதவர் இருக்க முடியாது. ஆனால், சென்ற மகா யுத்தத்தில் வீர தீரச் செயல்கள் புரிந்த "ராணா"வைப் பற்றிப் பலர் அறியாமல் இருக்கலாம். அப்போது ஐரோப்பியக் கடற்போர்களில் பிரிட்டிஷார் வெற்றி பெறுவதற்கு அந்த ராணா பெருதவியாக இருந்தது. பின்னர் அது மலாயா, பர்மா, சுமத்ரா முதலிய போர்முனைகளிலும் கலந்து கொண்டு வெற்றி பெற்று, ஜப்பானியரின் சரணாகதியையும் ஏற்றுக் கொண்டது.

அவ்வளவு பிரக்யாதிபெற்ற "ரெய்டர்" என்ற அந்த பிரிட்டிஷ் யுத்தக் கப்பல் இப்போது "ராணா" என்று புனர் ஜன்மம் எடுத்து சுதந்திர இந்தியாவின் கடற்படையில் சேர்ந்திருக்கிறது. அந்த யுத்தக்கப்பலை இந்தியாவினிடம் ஒப்புவிக்கும் வைபவம் சென்ற வாரம் லண்டன் துறைமுகத்தில் நடந்தது. அங்குள்ள இந்தியா ஹைகமிஷனர் இந்திய சர்க்கார் சார்பில் "ராணா"வை ஏற்றுக் கொண்டார். அந்தப் போர்க் கப்பல் கூடிய சீக்கிரம் இந்தியாவுக்கு வந்து சேரும். "ராணா" ரஜபுத்திர வீர திலகமான ராணா பிரதாபசிம்மனின் ஞாபகச் சின்னமாக விளங்குவதுடன், சுதந்திர இந்தியாவின் கடற்படைக்குப் புதிய சக்தியையும் கடற்படை வீரர்களுக்குப் புதிய உத்வேகத்தையும் அளித்து வருமாக!

# முட்டுக்கட்டைகள்!



# தந்திரிகளின் பாட்டுக்கு மந்திரிகளின் தாளம்!

ஒரு வீட்டிற்குள் அர்த்த ராத்திரியில் எவருக்கும் தெரியாமல் திருடன் ஒருவன் பிரவேசித்தான். தான் திருடிய பொருள்களையெல்லாம் கஷ்டப்பட்டு மூட்டையாகக் கட்டினான். அந்த மூட்டையை அவன் தூக்கிக் கொண்டு போகும் தறுவாயில், வீட்டிலிருந்தோர் விழித்துக்கொண்டு கூக்குரலிட்டனர்.

வீட்டுக்காரர்களும், அவர்களுக்கு உதவியாக வந்தவர்களும் சேர்ந்து திருடனை விரட்டியதில், அவன் மூட்டையுடன் சுவரின்மீது ஏறினான். அடுத்த வீட்டுப் பக்கமாகக் குதித்து ஓட்டம் பிடித்தான்.

எனினும், திருடன்தான் அண்டை வீட்டுப் பக்கமாகக் குதித்தானேயொழிய, அவனுடைய அவசரத்தில் மூட்டை தவறி அவன் திருடிய வீட்டிற்குள்ளேயே விழுந்து விட்டது! எனவே, திருடன் ஏமாந்து போனான்.

அவன் எந்தப் பக்கமாக, எப்படி வீட்டிற்குள் பிரவேசித்திருக்க வேண்டும் என்பது பற்றி அங்கிருந்தோர் சர்ச்சை செய்ய ஆரம்பித்தனர். ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமான தங்களுடைய அபிப்பிராயத்தைக் கூறினர்.

அடுத்த வீட்டுக்காரனும் தன்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்தான்.

"இங்கே வந்த திருடன் அடுத்த வீட்டுப் பக்கமாக வந்திருக்க வேண்டும். சுவரின் மீதேறி இந்த வீட்டிற்குள் நுழைந்திருக்க வேண்டும். சாமான்களையெல்லாம் திருடிக் கொண்டு சுவரைத் தாண்ட முயற்சித்த போது கால் தவறி விட்டிருக்கவேண்டும். அதனால்தான், தான் அந்தப் பக்கமாகக் குதித்தபோது மூட்டை இந்தப் பக்கமாக விழுந்துவிட்டது" என்று அடுத்த வீட்டுக்காரன் சொன்னான்!

திருடிக்கொண்டு போகும்போது அவனுடைய கால் இடறியதுபோல, அவ்விஷயத்தை அவன் மறைக்க முயன்றபோது அவனுடைய நாக்கு உண்மையை உளறிவிட்டது!

எனினும், தான் திருடன் என்ற உண்மை வெளியாகிவிட்டதே என்பதற்காக அவன் வெட்கப்படவும் இல்லை; ஓடி ஒளியவும் இல்லை.

தவறிக் கீழே விழுந்த மூட்டை தன்னைச் சேர்ந்தது என்றும் வாதாடத் தொடங்கினான்!

அவனது அக்கிரமமான துணிச்சலைக் கண்டு அங்கிருந்த முக்கியஸ்தர்கள் ஆச்சரியப்படவில்லை. அவனைப் போலீசாரிடம் அனுப்பவும் முற்படவில்லை.

அதற்கு மாறாக, அவ்விஷயத்தை ஒரு பத்தியஸ்தரின் பரிசீலனைக்கு விட வேண்டும் என்றும், வீட்டுக்காரனும் திருடனும் அந்த யோசனையை ஒப்புக் கொள்வதுதான் நியாயம் என்றும் மேற்படி முக்கியஸ்தர்கள் தங்களுடைய யோசனையை எல்லோருக்கும் முன்னிலையில் திருவாய் மலர்ந்து அருளினார்கள்!

• • •

காஷ்மீர் பிரச்னையைத் தீர்ப்பதற்காக அமெரிக்க ஜனாதிபதி ட்ரூமனும், பிரிட்டிஷ் பிரதம மந்திரி ஆட்லியும் இப்போது இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் கூறியுள்ள யோசனை மேலே குறிப்பிட்ட 'அருமையான' யோசனையைப் போலவே இருக்கிறது!

காஷ்மீர் பிரச்னை முதன் முதலாக ஐக்கிய நாடுகள் சபையில் விவாதத்துக்கு வந்தபோது "ஆஸாத் காஷ்மீர் படைகள்" என்ற கொள்ளைக்காரர்களுக்கும் தங்களுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை என்று ஸர் முகமது ஜபருல்லாகான் சாதித்தார். தம்முடைய பொய்க் கூற்றை உலகம் நம்பும்படி செய்வதற்காக அந்தச் சபையிலே நாள் கணக்கிலும், மாதக் கணக்கிலும் பேசித் தீர்த்தார்.

ஐ. நா. சபையினால் நியமிக்கப்பட்ட காஷ்மீர் கமிஷன் காஷ்மீரத்துக்கு நேரில் சென்று பார்த்தபோது அங்கிருந்த நிலைமை ஜபருல்லாகான் அளந்த கதைக்கு நேர்மாறாக இருந்தது.

அதாவது பாகிஸ்தான் சர்க்காரின் மேற்பார்வையில் ஆஸாத் காஷ்மீர் படைகள் போரிடுகின்றன என்பது தெரிந்தது.

சில நாட்களுக்குப் பிறகு, அந்தப் படைகளுடன் பாகிஸ்தான் படைகளும்

சேர்ந்து கொண்டிருக்கின்றன என்பது வெளியாயிற்று.

ஆனால், கொள்ளைக்காரர் படைக்கும் தங்களுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை யென்று சர்வதேச அரங்கத்தில் சத்தியம் செய்த பாகிஸ்தான் இப்போது என்ன சொல்லுகிறது தெரியுமா?

மேற்படி படை பாகிஸ்தான் படையின் ஒரு பகுதிதான் என்கிறது! ஆஸாத் காஷ்மீர் படையும் பாகிஸ்தான் படையும் ஒன்றுதான் என்று பட்டவர்த்தனமாகச் சொல்லுகிறது!

அவ்வாறு பாகிஸ்தான் கூறுவதன் அர்த்தம் என்ன?

காஷ்மீர் மீது அக்கிரமமாகப் படையெடுத்து ஜனங்களைப் படுகொலை செய்ததும், சொத்துக்களைக் கொள்ளையிட்டதும், கிராமங்களைக் கொளுத்தியதும் தங்களுடைய படைகள்தான் என்பதைப் பாகின்தான் சர்க்கார் உலகம் அறிய ஒப்புக் கொள்கிறார்கள் என்று ஆகிறது.

ஆனால், இவ்வளவு தெளிவான விஷயம் சர்வ தேச ராஜதந்திரிகளுக்குப் புரியுமா? தெளிவான விஷயத்தை மாதக் கணக்கில் குட்டைக் குழப்பும் ஐ. நா. சபைக்குத்தான் புரியுமா?

பாகிஸ்தான் சர்க்கார் அவ்வாறு ஒப்புக் கொண்ட பின்னருங்கூட ஐ. நா. கமிஷன் அதைக் கண்டித்து ஒரு வார்த்தைகூடக் கூறவில்லை.

அந்தக் கமிஷனின் மத்தியஸ்த யோசனையை ஏற்க வேண்டும் என்று சிபார்சு செய்ய முன் வந்திருக்கும் ட்ரூமன், ஆட்லி கோஷ்டியாரும் அதை ஆட்சேபித்து ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை.

எனவே, அதன் மர்மம் என்ன என்பதைக் குறித்து இந்திய சர்க்காரும் இந்திய மகாஜனங்களும் ஆச்சரியத்தில் மூழ்கியிருக்கின்றனர்.

• • •

ஐ. நா. சபையின் தீர்மானத்தை அடிப்படையாகக் கொண்ட காஷ்மீர் ஒப்பந்தத்தில், ஆஸாத் காஷ்மீர் படைகள் கலைக்கப்பட வேண்டும் என்பது முக்கிய அம்சம்.

அதைப் பாகிஸ்தான் சர்க்கார் நிறைவேற்றுதுடன், ஆஸாத் காஷ்மீர் படைகளும் பாகிஸ்தான் படைகளும் ஒன்றுதான் என்றும் கூற முன் வந்திருக்கிறார்கள்!

பாகிஸ்தானின் பிடிவாதத்தினாலும், முரண்பாட்டினாலும், அக்கிரமமான போக்கினாலும் தான் கைக் கொண்டுள்ள சமாதான முயற்சி வெற்றிபெறவில்லை என்பதை ஐ நா. கமிஷன் ஒத்துக் கொண்டிருந்தால், கமிஷனின் முயற்சி தோல்வியுற்றாலும் ஐ. நா. சபையின் கௌரவமாவது உயர்ந்திருக்கும்.

ஆனால், காஷ்மீர் கமிஷன் அந்த நேரடியான பாதையை விட்டு விட்டு விஷயத்தை மழுப்பியிருக்கிறது. காஷ்மீர் பிரச்னையை ஆயுத பலத்தினாலன்றிச் சமாதானமாகத் தீர்த்துக் கொள்ளுவதிலும், ஒப்பந்த ஷரத்துகளை நிறைவேற்றுவதிலும பாகிஸ்தான் சர்க்கார் அந்தரங்க சுத்தியுடன் இருந்து வருவதாகப் புகழ்ந்திருக்கிறது!

கடைசியாக, மேற்படி கமிஷன் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் ஒரு யோசனை கூறியிருக்கிறது.

சென்ற மகாயுத்தத்தில் கலந்து பிரக்யாதி பெற்ற அமெரிக்கப் பிரமுகரான ‘‘அட்மிரல் செஸ்டர் நிமிட்ஸை மத்தியஸ்தராக இந்தியாவும் பாகிஸ்தானும் ஒத்துக் கொள்ள வேண்டும். அவர் சகல தகராறுகளையும் தீர்த்து முடிவு செய்வார். அந்த முடிவை இரு சாராரும் அங்கீகரிக்க வேண்டும்’’ என்று கமிஷன் கட்டளையிடுகிறது.

கமிஷன் கூறியுள்ள மேற்படி யோசனைதான் சிறந்ததாம். உலக சமாதானத்தை முன்னிட்டு அதை இந்தியாவும் பாகிஸ்தானும் அங்கீகரிக்க வேண்டுமாம். இவ்வாறு சர்வதேச தந்திரிகளின் பாட்டுக்குத் தகுந்தவாறு ட்ரூமனும் ஆட்லியும் மற்றுமுள்ள அமெரிக்க, பிரிட்டிஷ் மந்திரிகளும் தாளம் போடுகிறார்கள்!

நியாயமான எவ்வித காரணமுமின்றிக் காஷ்மீர் ஜனங்களைப் பலியிட்ட, காஷ்மீர் நகரங்களையும் கிராமங்களையும் சூறையாடிய கொள்ளைக்காரர்களின் படைகள் தன் இராணுவத்தின் ஒரு பாகமே என்று கூறும் பாகிஸ்தானையும், மேற்படி படைகளை எதிர்த்து நின்று காஷ்மீரைக் காப்பாற்றிய இந்தியாவையும் சம நிலையில் வைக்கும் கமிஷனின் மத்தியஸ்த யோசனை ஆச்சரியமாக இருக்கிறது.

அந்த யோசனையை ஏற்கவேண்டும் என்று ட்ரூமனும் ஆட்லியும் சிபார்சு செய்வது அதைக் காட்டிலும் ஆச்சரியமாக இருக்கிறது.

‘‘மத்தியஸ்தம் செய்து வைக்கத் தயார்’’ என்று அட்மிரல் நிமிட்ஸ் துடிதுடித்துக் கொண்டிருப்பது எல்லாவற்றையும்விட ஆச்சரியமாக இருக்கிறது.

# எட்டயபுரத்தில் பாரதி விழா

பகீரதன்

செப்டம்பர் 11உ; ஞாயிற்றுக் கிழமை பிற்பகல் நாலு மணி. இந்த உலகத்தில் எது எப்படிப் போனாலும் தன்னுடைய காரியத்தைத் தவறாமல் செய்து வரும் சூரியன் வழக்கம் போல வான வீதியில் பவனி வந்து கொண்டிருந்தான். மேளச் சத்தமும் ஜனங்களின் கோலாகல ஆரவாரமும் காதில் விழவே என்ன என்று எட்டிப் பார்த்தான். பார்த்தவன் பார்த்தபடியே தன்னை மறந்து நின்றிருக்க வேண்டும். இல்லாவிட்டால் அன்று நாலு மணிக்குக்கூட வெய்யில் அப்படிச் சுள் என்று காயுமா?

தமிழும், தமிழர்களும், தமிழ்நாடும் உய்யப் பாடிய பாட்டுக்கொரு புலவன் பாரதியைப் பெற்றெடுத்த பெருமை புராதனச் சிறப்பு வாய்ந்த எட்டயபுரம் என்னும் சிற்றூரைச் சார்ந்தது. அந்தச் சிற்றூரின் புராதனப் பெருமையுடன் புதுப் புகழும் மணக்க பாரதியின் புகழைப் பாருக்கெல்லாம் சொல்லிக்கொண்டு பாரதியின் ஞாபகார்த்த மண்டபம் பழமையும் புதுமையும் கலந்து கம்பீரமாக ஜொலித்துக் கொண்டிருக்கிறது. அழகிய கோபுரமும் அமைதி தரும் மண்டபமும் புத்தகசாலையும் உள்ள அந்த அற்புதமான கலைக் கோயிலை நமது கவர்னர் ஜெனரல் ராஜாஜி அவர்கள் இரண்டு வருஷங்களுக்கு முன்னால் திறந்து வைத்ததை நேயர்கள் மறந்திருக்க மாட்டார்கள்.

மகா கவி பாரதியார் அமரத்வம் அடைந்த புனித தினமாகிய செப்டம்பர் 11உ அன்று 'பாரதி விழா'வைச் சிறப்பாகக் கொண்டாட ஏற்பாடு செய்திருந்தனர். பாரதி மணி மண்டபத்துக்கு முன்னால் இருக்கும் திறந்த வெளியில் சுமார் ஐயாயிரம் பேர் அமரும்படியான அழகான பந்தல் அமைத்திருந்தார்கள். பந்தலுக்கு உள்ளே இருந்த ஒவ்வொரு பந்தக் காலும் பாரதியின் மணி வாசகங்கள் பொறிக்கப்பட்டிருந்த 'போர்டு'களைச் சுமந்து கொண்டு சோம்பலின்றி நின்று கொண்டிருந்தன. பந்தல் விதம் விதமான புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. பந்தலுக்கு எதிரில் ஓங்கி வளர்ந்திருந்த கம்பத்தின் உச்சியில் நமது தாயின் மணிக் கொடி பட்டொளி வீசிப் பறந்துகொண்டிருந்தது.

உணவு நெருக்கடி காரணத்தாலும் இதர பல அசௌகரியங்களினாலும் பாரதி விழாவில் கலந்து கொள்ள ஏராளமான ஜனங்கள் வரவேண்டாம் என்று பிரசாரம் செய்திருந்த போதிலும் பந்தலுக்குள்ளும் பந்தலுக்கு வெளியிலும் சாலைகளிலும் இட நெருக்கடியை ஏற்படுத்திக் கொண்டு ஜனங்கள் குதூகலத்துடன் கூடிவிட்டனர். இந்தக் கோலாகலமான கூட்டத்தைப் பார்த்தால் சூரியபகவான் என்ன, யாராயிருந்தாலும் தம்மை மறந்து நிற்கவேண்டியதுதானே!

பாரதி பரம்பரையில் வந்த ஆஸ்தான கவிஞர் ஸ்ரீ நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை அவர்கள் இந்த வருஷத்து பாரதி விழாவுக்கு மிகுந்த உற்சாகத்துடன் தலைமை தாங்கினார்கள். இதைவிட சந்தோஷமும் பெருமையும் தரும்படியான காரியம் அவருக்கு வேறு என்ன இருக்க முடியும்? மகாகவியின் விழாவுக்கு ஆஸ்தான கவிஞர் தலைமை வகிக்கிறார் என்றால் தமிழர்களின் ஆர்வத்துக்குக் கேட்கவா வேண்டும்? தமிழ்நாட்டின் பல்வேறு பாகங்களிலிருந்தும் பாரதி அன்பர்கள் பரவசத்துடன் வந்திருந்தார்கள். பண்டிதர்கள் பக்தியுடன் குழுமியிருந்தனர். பத்திரிகை ஆசிரியர்களும் பத்திரிகை நிருபர்களும் இலக்கிய ரசிகர்களும் எழுத்தாளர்களும் கவிவாணர்களும் இசைவாணர்களும் தேசத் தொண்டர்களும் தேசியத் தலைவர்களும் பாட்டாளித் தோழர்களும் பாமர மக்களும் கவியரசர் பாரதியாருக்கு மரியாதை செலுத்த மட்டற்ற மகிழ்ச்சியுடன் கூடியிருந்தனர்.

வேறு எந்தக் காரியத்தில் எவ்வளவு வித்தியாசங்கள் இருந்தபோதும் பாரதி விழாவில் மட்டும் எந்தவிதமான கட்சி வேற்றுமையும் கிடையாது என்று தெரியவந்தது. மேடையில் தலைவருக்கு இருபுறத்திலும் பிரதம மந்திரி கனம் குமாரசாமி ராஜா, உணவு மந்திரி கனம் ரோச் விக்டோரியா, எட்டயபுரம் மகாராஜா, ரசிகமணி ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார், 'கல்கி' மானேஜர் ஸ்ரீ டி. சதாசிவம், 'சிந்தனை' ஆசிரியர் ஸ்ரீ அ. சீனிவாச ராகவன், ஸ்ரீ அ. முத்துசிவன், காரைக்குடி சா. கணேசன், திருநெல்வேலி நகர சபைத் தலைவர்



பிரதம மந்திரி கனம் குமாரசாமி ராஜா பாரதி விழாவை ஆரம்பித்து வைக்கிறார்.

ஸ்ரீ ப. ராமசாமி, தூத்துக்குடி நகர சபைத் தலைவர் ஸ்ரீ சுந்தரவேல் நாடார், கோயமுத்தூர் ஸ்ரீ சுப்ரமண்யம் (சுப்ரி), எம். எல். ஏ., திருச்சி சூபரிண்டெண்டு இன்ஜினீயர் ஸ்ரீ ராமசந்திரம், ஸ்ரீ மேகநாதன், கோவில்பட்டி ஸ்ரீ சண்முகம் பிள்ளை, சங்கரன்கோவில் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம், விட்டலபுரம் ஸ்ரீ வெங்கடாச்சாரி, பெரியதிருவடி ஸ்ரீ மு. துரைசாமி நாடார், ஸ்ரீ ஆர். ஆர். தனவாய் முதலியவர்கள் பிற்பகல் நாலு மணிக்கு விழா ஆரம்பித்ததிலிருந்து இரவு இரண்டுமணி வரை உற்சாகத்துடன் இருந்து சிறப்பித்தார்கள்.

எட்டயபுரம் பாரதி விழா 11, 12 தேதிகளில் வெகு விமரிசையாக நடந்தது. 11-ந் தேதி காலை எட்டு மணிக்குக் காப்பி பலகாரத்துடன் விழா ஆரம்பமாயிற்று. உபசாரத்துக்காக எழுதவில்லை; உண்மையிலேயே காப்பி பலகாரத்துடன்தான் பாரதி விழா ஆரம்பமாயிற்று.

“வருஷம் ஒன்றுக்கு சுமார் நூறு கோடி ரூபாயை அரிசிக்காக அயல்நாடுகளுக்கு அனுப்பி வருகிறோம். அடுத்த வருஷத்திலிருந்து வெளிநாடுகளிலிருந்து வரும் அரிசி நின்றுபோகும். அதனால் அரிசி யில்லாத புன்செய் தானியங்களையும் சாப்பிட்டுப் பழகிக் கொள்ள வேண்டும் என்று நமது கவர்னர் ஜெனரல் ராஜாஜி அவர்களும், பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு அவர்களும் பிரசாரம் செய்து வருகின்றனர். இப்பொழுது நமது மகாகவி பாரதி இருந்தால் உங்களை எல்லாம் சோளத்தையும் ராகியையும் சாப்பிடும்படி பாடி இருப்பார். புன்செய் தான்யங்களில் நாக்குக்கு ருசியான எல்லா விதமான பண்டங்களையும் தயாரிக்கலாம். அது உடம்புக்கு நல்லது; அரிசியை விடப் புஷ்டி தரக்கூடியது. புன்செய் தானியங்களில் எப்படிச் சிற்றுண்டிகள் தயாரிக்கலாம் என்பதைக் காண்பிப்பதற்காகத்தான் சென்னையிலிருந்து நண்பர் ஸ்ரீ ஆர். ஆர். தனவாய் அவர்களும் ஸ்ரீ ராமகிருஷ்ணன் அவர்களும் வந்து புன்செய் தான்ய பிரசார சிற்றுண்டிச் சாலையை நடத்துகிறார்கள். நம்முடைய தேசத்துக்கே இச்சமயம் மிக முக்கியமான தேசியத் திருப்பணி இது!” என்று சொல்லிச் சிற்றுண்டிச் சாலையை ‘கல்கி’ ஆசிரியர் திறந்து வைத்தார்.

அந்தச் சிற்றுண்டிச் சாலையில் எல்லாருடைய கவனத்தையும் கவரும்படியான ஒரு பொருள் இருந்தது. அதாவது கவர்னர் ஜெனரல் ராஜாஜி அவர்கள் தம்முடைய மாளிகையின் தோட்டத்தைத் தன் கையினாலேயே உழுது 28-6-49ல் சோளத்தை விதைத்தார்கள். அந்தச் சோளம் பயிராகி நன்றாக வளர்ந்து சோளக் கொண்டைகள் வெடித்தன. இரண்டு மாதம் கழித்து 8-8-49ல் சோளம் அறுவடை செய்யப்பட்டது. அந்த அருமையான சோளத்தை 2-9-49ல் மாவாக அரைத்து எட்டயபுரம் பாரதி விழாவில் நடக்கும் புன்செய் தான்ய சிற்றுண்டிச் சாலையில் வைப்பதற்காக ‘கல்கி’ ஆசிரியர் அவர்களிடம் கொடுத்து விமான மார்க்கமாக அனுப்பி வைத்திருந்தார்கள்.

அத்துடன் சோளத்தையும் ராகியையும் எப்படிப் பக்குவம் செய்து சாப்பிடுவது என்பதையும் தனி பாக முறைபோல எழுதி அனுப்பியிருந்தார்கள். அந்தக் கடிதத்தைக் ‘கல்கி’ ஆசிரியர் அவர்கள் படிக்கும்போது கூட்டத்தினர் குதூகலத்துடன் ஆரவாரம் செய்தனர். கவர்னர் ஜெனரல் அவர்கள் எழுதியனுப்பியிருந்த கடிதத்தை அப்படியே எதிர்ப் பக்கத்தில் பிரசுரித்திருக்கிறோம்.

புன்செய் தான்ய சிற்றுண்டிச் சாலையில் பின்வரும் ஜாபிதாவில் கண்ட விவரப்படி சிற்றுண்டிகள் தயாரிக்கப்பட்டிருந்தன.

இனிப்பு: சோள அடை, கேப்பை அடை, கோதுமை அல்வா.

காரம்: சோள தோசை (சன்னாச் சட்னியுடன்), கோதுமை தோசை, கம்பு உப்புமா,



GOVERNMENT HOUSE

NEW DELHI

31. 8. [illegible]

[illegible]

[illegible]

[illegible]
சோள அடையும் ராகி அடையும்
[illegible]
கொஞ்சம் வெண்ணெய் சேர்த்து
[illegible]

[illegible]

பூரி உருளைக்கிழங்கு, சோளமைம் ஸவா பாத், சோள பஜ்ஜி, ஆட்டா தோக்கடி, சோள வடை, புஞ்சை தானிய மிக்சர்.

சோள உப்புமாவும், என்னுச் சட்னி யுடன் கூடிய சோளத் தோசையும், சோள பிஸ்கட்டும், அடாடா! என்ன ருசி! அபாரம் போங்கள்! அந்தப் புன்செய் தான்ய சிற்றுண்டிகளை ஒருதரம் சாப்பிட்டவர்கள் பிறகு அரிசியை அவ்வளவாக மதிக்க மாட்டார்கள் என்று சத்தியம் செய்யலாம்.




புன்செய் தானியப் பிரசார சிற்றுண்டிச் சாலையின் தோற்றம்

மத்தியானம் மூன்று மணி சுமாருக்கு மேளவாத்தியம் 'ஜாம்' 'ஜாம்' என்று முழங்க பாரதி பக்தர்களும் தமிழ் அன்பர்களும் "பாரதி வாழ்க!" என்று வானளாவ கோஷிக்க பாரதிவிழாத் தலைவரான ஆஸ்தான கவிஞர் நாமக்கல் ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளை அவர்களை அலங்கரிக்கப்பட்ட காரில் வைத்து முக்கியமான தெருக்களின் வழியாகப் பாரதி மண்டபத்துக்கு ஊர்வலமாக அழைத்து வந்தனர். வழியெல்லாம் கவிஞருக்குக் கதம்ப மாலைகளும் கதர் மாலைகளும் ரோஜாப்பூ மாலைகளும் சூட்டித் தம் அன்பைத் தெரிவித்துக் கொண்டனர் எட்டயபுர வாசிகள்.

கூடியிருந்த மக்கள் எல்லாரும் குதூகலத்துடன் கரகோஷம் செய்ய ஆஸ்தான கவிஞர் நாமக்கல் ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளை பந்தலுக்குள் சென்று விழாவுக்குத் தலைமை வகித்தார்.

எட்டயபுரம் பஞ்சாயத்து போர்டின் சார்பில் ஆஸ்தான கவிஞருக்கும், பிரதம மந்திரிக்கும், உணவு மந்திரிக்கும் எட்டயபுரம் மேயர் ஸ்ரீ கந்தசாமிச் செட்டியார் அவர்களால் விழாப் பந்தலிலேயே உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுக்கப்பட்டது.

"இந்தச் சிற்றூர் தமிழ் வளரவும் தமிழ்ப் புலவர்கள் வாழவும் வசதி யளித்து, வள்ளன்மை காட்டி வானமுட்டும் புகழ் கொண்டது. இன்றும் தமது பரம்பரையைப் போற்றித் தமிழ் வளருவதற்கான காரியங்கள் செய்வதில் பின் வாங்கியதில்லை. பாரதியார் மண்டபம் கட்டுவதற்காக 'கல்கி' ஆசிரியர் யோசனை கூறியபோதே அதை உற்சாகத்துடன் வரவேற்று கலைக்கோவில் கட்டக் காணி கொடுத்தது. இந்த சமயத்தில் சுதந்திர இந்தியாவின் கவர்னர் ஜெனரல் ராஜாஜி அவர்களை நம்மால் மறக்க முடியவில்லை. பாரதி மண்டபத்தின் அஸ்திவாரக் கல்லை நாட்டி பாரதி மண்டபம் கட்டி முடிந்தவுடன் மண்டபத்தையும் திறந்து வைத்து இன்றும் பாரதியையும், பாரதி மண்டபத்தையும் எட்டயபுரத்தையும் மறக்காமல் தங்களுடைய ஆசியைச் செலுத்திக் கொண்டு வருகிறார்கள். அவர்கள் இந்தியக் குடியரசின் முதல் தலைவராக வரவேணுமென்று பிரார்த்தித்து உங்களையெல்லாம் வரவேற்கிறேன். ஆஸ்தான கவிஞர் அவர்களை இந்த விழாவுக்குத் தலைமை தாங்கும்படி கேட்டுக் கொள்கிறேன்" என்று



பாரதி பக்தர்கள் புடைசூழ ஆஸ்தான கவிஞர் விழாப் பந்தலுக்கு வருகிறார்.

கரகோஷங்களுக்கு மத்தியில் வரவேற்றார் ஸ்ரீ கந்தசாமிச் செட்டியார்.

பிறகு காரைக்குடி ஸ்ரீ சா. கணேசன் அவர்கள் தம்முடைய கணீரென்ற வெண்கல நாதக் குரலில் விழாவுக்கு வந்திருந்த வாழ்த்துக்களில் சிலவற்றைப் படித்தார்.

கவர்னர் ஜெனரல் ராஜாஜி அவர்கள் எட்டயபுரம் பாரதி விழாவுக்கு அனுப்பியிருந்த ஸ்ரீமுகத்தை 'கல்கி' வாசகர்கள் சென்ற இதழிலேயே படித்து மகிழ்ந்திருப்பார்கள். அந்த வாழ்த்துச் செய்தியை வரிக்கு வரி நிறுத்தி அழகாகப் படித்த போது ஜனக்கூட்டத்தில் இருந்த உணர்ச்சியை நேரிலிருந்து அனுபவித்தால்தான் தெரியும். இன்னும் கனம் பக்தவத்ஸலம், கனம் பெருமாள்சாமி ரெட்டியார், திருப்புகழ் மணி ஸ்ரீ டி. எம். கிருஷ்ணசாமி ஐயர், சர்தார் வேதரத்தினம், மயிலாப்பூர் ஸ்ரீ கே. பாலசுப்ரமண்ய ஐயர், சென்னை மேயர் ஸ்ரீ ராமசாமி நாயுடு, மதுரை கரு முத்துத் தியாகராஜ செட்டியார், பம்பாய் தமிழ்ச் சங்கம், மலேயா தமிழர்கள், தருமபுரம் ஆதீன கர்த்தா முதலியவர்களிடமிருந்து வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன.

தம்முடைய கவித்வம் நிறைந்த கம்பீரமான குரலில் "அன்பர்களே!" என்று அருமையாக அழைத்து ஆஸ்தான கவிஞர் தம் தலைமையுரையை நிகழ்த்தினார்.

"சாந்தியைப்போல அச்சத்தை விட்டொழிக்கப் போதித்தவரும் அச்சமற்ற வாழ்க்கையை நடத்திக் காட்டியவரும் இந்த உலகில் வேறு ஒருவரும் இல்லை. அதைப் போலவே அச்சத்தை அகற்ற வேண்டுமென்ற ஒன்றுக்காகவே பல பாடல்களைப் பாடியவர் பாரதி ஒருவர்தான்" என்று சொல்லி பாரதியைப் பாட வைத்தார்.

பாம்பெனும் பேய்தனை அடித்தோம்
—பொய்மைப்
பாம்பைப் பிளந்துயிரைக் குடித்தோம்.

என்று பாரதி ஜயபேரிகை கொட்டுவது எல்லார் காதிலும் ஒலித்தது.

இன்னும் பாரதியைப் 'புதுமையும் புரட்சியும்' உள்ள புலவனாகக் காண்பித்தார். 'அத்வைத மெய்ஞானம்' உபதேசம் செய்யும் ஞானியாகக் காண்பித்தார். 'சஞ்சீவி பஞ்சகம்' பாடச் செய்தார். கடைசியாக




"எனக்கும் ராமுவுக்கும் நேற்று பலத்த சண்டை வந்துவிட்டது. அவனைப் பொய்யன் என்றேன். அவன் என்னைப் பொய்யன் என்று திருப்பிச் சொன்னான்......"

"பேஷ்! முதல் தடவையாக நீங்கள் இருவரும் நேற்று உண்மை பேசியிருக்கிறீர்கள்!"

---

'திருமகள் தாண்டவம்' செய்யும் பாரதியின் பாடலைப் பாடிக் காண்பித்தார்.

காந்திசேர் பதுமராகக்
கடிமலர் வாழ் ஸ்ரீதேவி
போந்து நிற்கின்றாள்
இன்று பாரதப் பொன்னாடெங்கும்,
மாந்தர் எல்லாரும் சோர்வை
அச்சத்தை மறந்துவிட்டார்;
காந்திசொல் கேட்பார்;
காண்பார் விடுதலை கணத்துள்ளே!

பாரதியின் சொல்படி காந்தியின் சொல் கேட்டோம். நம் காலத்தில் விடுதலை கண்டோம். ஸ்ரீ தேவியும் வந்துவிட்டாள். இனி நாட்டில் எல்லா நலன்களும் பெருகும்.

வாழ்க பாரதியின் புலமை!

என்று கூறி அவர் தம் தலைமை யுரையை முடித்தபோது சபையோர் சந்தோஷ ஆரவாரம் செய்தனர்.

பாரதி மண்டபத்துக்காக மதுரை கருமுத்துத் தியாகராஜ செட்டியார் அவர்கள் அன்புடன் அளித்த ஒன்பது வால்வு ரேடியோ பெட்டி ஒன்றும் அதனுடைய பெரிய ஒலி பெருக்கியும் மேடைமீது மௌனமாக இருந்தன. விழாவைத் தொடங்கி வைப்பதற்கு முன் கனம் குமாரசாமி ராஜா அவர்கள் அந்த ரேடியோவைத் திறந்து வைத்தார்கள். ரேடியோவை கனம் ராஜா தொட்டதுதான் தாமதம், "தீராத விளையாட்டுப் பிள்ளை" என்னும் பாரதியின் புகழ் பெற்ற கண்ணன் பாட்டு கம்பீரமாக ஒலிபெருக்கியின் மூலம் வந்து எல்லாரையும் குதூகலத்தில் ஆழ்த்தியது.

"நான் எழுத்தாளனல்ல என்பது மாத்திரமல்ல; 'புலவர் வறுமை'யை அனுபவித்தவனு மல்ல. அந்த அதிர்ஷ்டம் சமூகத்தை அடியோடு மாற்றி அமைக்கப் பார்க்கும் மேதாவிகளின் ஏகபோக உரிமையாகும். மேலும் நமது ராஜாஜியைப் போல பாரதியின் நூல்களை, நுட்பமாக ஆராய்ந்து அனுபவித்துப் படித்தவனுமல்ல" என்று சொல்லி 'காந்தி மகான்மீது பாரதி பாடியிருக்கும் பாடலையே சிறிது மாற்றி,

வாழ்க! நீ எம்மான் இந்த
வையத்து நாட்டிலெல்லாம்
தாழ்வுற்று வறுமை மிஞ்சி
விடுதலை தவறிக் கெட்டு
பாழ்பட்டு நின்ற தாமோர்
பாரத தேசந்தன்னை
வாழ்விக்க வந்த பாரதி
மகாகவி! நீ வாழ்க! வாழ்க!

என்று பாடி "மகாநாட்டை மகிழ்ச்சியுடன் திறந்து வைக்கிறேன்" என்று கூறி மகாநாட்டைத் திறக்காமல் திறந்து வைத்தார்.

உணவு மந்திரி கனம் ரோச் விக்டோரியா அவர்கள் "உலகம் போற்றும் உத்தமராகிய மகாத்மாவைப் பற்றி ஒவ்வொரு இந்தியனும் பெருமை கொள்கிறான். மதிநுட்ப ராஜாஜியைப் பற்றி ஒவ்வொரு தமிழனும் பெருமை கொள்கிறான். அமரகவி பாரதியைப் பற்றி நான் மிகப் பெருமை கொள்கிறேன். ஏனெனில் அவர் பிறந்த ஜில்லாவில் நான் பிறந்தேன்" என்று சொல்லித் திருநெல்வேலி ஜில்லாக்காரர்களுக்கு உள்ள ஜில்லா பற்றைக் காண்பித்துக் கொண்டார். பிறகு மேடை மீது எல்லாருடைய கவனத்தையும் கவர்ந்துகொண்டு மூடி வைத்திருந்த நாலு படங்களையும் திறந்து வைத்தார்.

கனம் மந்திரி அவர்கள் அந்தப் படங்களைத் திறந்து வைப்பதற்கு முன் ஸ்ரீ ரோடரிக்ஸ் அவர்கள், சித்திரக்காரர் சந்திரா வெகு திறமையுடன் வரைந்து அனுப்பியிருந்த படங்களைப் பற்றிப் பேசினார். கவிச் சக்கரவர்த்தி கம்பன், காளிதாஸன், தாகூர், ஷேக்ஸ்பியர் ஆகிய நாலு கவிகளைப் பற்றியும் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார். அந்த மகாகவிகளின் படங்கள் பற்பல வர்ணங்களுடன் எல்லோருடைய கண்ணையும் கருத்தையும் கவரும் முறையில் மிக மிக அற்புதமாக அமைந்திருந்தன. (தொடரும்)




# கருணை

கி.ரா.கோபாலன்

கானகம் சென்று கடுந்தவம் செய்ய வேண்டுமென்று யாரேனும் ஆசைப்பட்டால முதலில் பதினைந்தாம் நம்பர் பஸ்ஸுக்காக நின்று காத்திருந்தால் போதும். நாம் பஸ்ஸை எதிர்நோக்கிப் படும் கஷ்டத்தைப் பார்த்துக் கடவுள்கூடத் துடிதுடித்துப் பிரத்யட்சமாகிவிடுவார். பெற்ற தாயும் தந்தையும் இந்த கோரக் காட்சியைக் கண்டு விட்டால் பார்த்த இடத்திலேயே பனிக் கட்டியாக உருகிவிடுவார்கள். என்னுடைய தாயும் தந்தையும் பிறவிப் பயனை முடித்துக் கொண்டு போய்விட்டார்கள். மனைவி இருக்கிறாள்; அவள் தனக்காக உருகவே நேரம் போதவில்லை என்கிறாள். உத்தியோகம் பார்ப்பது தலைவிதி யென்றால் பஸ்ஸுக்குக் காத்துக் கொண்டு நிற்பதும் அப்படித் தானே இருக்கவேண்டும்?

கோடை காலம்; மணி பதினொன்று தானிருக்கும். வெய்யிலின் கொடுமையைப் பார்க்கும்பொழுது பகல் மணி ஒன்றிருக்கும் என்று எல்லோரும் சாதாரணமாக நினைக்கத் தோன்றும். நான் பதினைந்தாம் நம்பர் பஸ் வரும் வழியில் விழி வைத்துக் காத்திருந்தேன், முக்கால் மணி நேரமாக. சமீபத்தில் ஒதுங்கி நிற்கச் சிறிதுகூட நிழல் வாடையே இல்லை. என்னுடைய நிழல்தான் பூமியல் விழுந்தது. ஆனால் என்னுடைய நிழலிலேயே நான் எப்படி நிற்க முடியுமென்றுதான் தெரியவில்லை. உடல் முழுவதும் வியர்த்துக் கொட்டிக் கொண்டிருந்தது. மண்டை வெடித்து விடும்போல் சூடேறியிருந்தது. பஸ் வரும் வழியிலேயே நிலைத்து நின்ற என் விழி தற்செயலாகத் திரும்பியது. திடுக்கிட்டேன்; ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். என்னைப் போல இன்னொரு ஜீவனும் பஸ்ஸுக்காக நின்று தவம் கிடப்பதைப் பார்த்ததும் என் மனதிற்கு ஓர் ஆறுதல் ஏற்பட்டது. ஆனால் இந்த ஆறுதல் என் மனதில் நிலைத்து நிற்கவில்லை. இயற்கையாக அந்தப் பெண்ணிடம் எனக்கு இரக்கமும் பரிதாபமும் ஏற்பட்டன.

அந்தப் பெண் ஒரு கலாசாலை மாணவியாக இருக்க வேண்டு மென்று தோன்றியது. வயது இருபது இருக்கும்; ஒல்லியான உருவம். தலை அலங்காரம் உடல் அலங்கார மெல்லாம் தற்கால நாகரிகத்தின் அடிப்படையில் பெண்மையின் பெருமைக்கும் அழகுக்கும் தடை கட்டுவது போலத் தானிருந்தன. கையில் அடுக்காகப் புத்தகச் சுமை. பாவம், நிற்கமாட்டாமல்தான் அவள் நின்று தத்தளித்துக் கொண்டிருந்தாள். எனக்கு அந்தப் பெண் மீது ஒருவகையில் மட்டுமல்ல, எல்லா வகையிலும் பரிதாபம் ஏற்பட்டது.

கலாசாலைகளில் இடம் கிடைக்காத காலத்தில் இப்படிப்பட்ட பெண்களெல்லாம் ஏன் சிரமப்பட வேண்டும்? மெல்லிய கொடி போன்ற கரங்களில் எதற்காக இவ்வளவு புத்தகங்களைச் சுமக்க வேண்டும்? மணிக் கணக்காகத் தகிக்கும் வெய்யிலில் நின்று ஏன் தவித்துத் துடிக்க வேண்டும்?—எல்லாம் ஆசை; படிக்க வேண்டு மென்ற ஆர்வம். அவள்மீது பிசகில்லை. பள்ளிக்கூடங்களிலும் கலாசாலைகளிலும் சுலபமாகச் சேர்ந்து படிக்கத்தான் அரசாங்கம் வேண்டிய வசதிகள் செய்யாவிட்டாலும்

அதிர்ஷ்ட வசமாகக் கலாசாலைகளில் சேர்ந்து படிப்பவர்களுக்காவது போக்கு வரத்துச் சாதனங்களைச் சீர்திருத்தம் செய்து வசதி செய்யக்கூடாதா? வெய்யிலிலும் மழையிலும் பஸ்ஸுக்காகக் காத்துக் கொண் டிருப்பதிலேயே ஆயுள் கரைந்து விடும்போலிருக்கிறதே! வாழப் பிறந்ததே பஸ்ஸுக்குக் காத்துக்கொண்டு நிற்கத்தானா?

அவளும் மனதிற்குள் ஏதோ பஸ் போக்குவரத்தைப் பற்றிச் சாபமிட்டுக் கொண்டிருப்பாள் போலத்தான் எனக்குத் தோன்றியது. இந்த ஜன்மத்தில் இல்லாவிட்டாலும் வேறு எந்த ஜன்மத்திலாவது அவள் ஒரு நளாயினியாகவோ, சாவித்திரியாகவோ பிறந்திருந்தாளானால் கட்டாயம் அவள் சாபம் இந்த ஜன்மத்திலும் பலிக்கும். அவளுடைய சாபத்தில் சூரியன் ஒளியிழந்து போகாவிட்டாலும், சென்னை நகரில் அந்தச் சமயத்தில் ஓடிக்கொண்டிருக்கும் அத்தனை பஸ்களும் அங்கங்கே 'ஸடன் பிரேக்' போட்டதுபோல் நின்றுவிடும்.

இப்படி யெல்லாம் நான் நினைத்துக் கொண்டிருக்கும்போது ஒரு பஸ் வந்து நின்றது. பதினைந்தாம் நம்பர் பஸ்தான். அவசர அவசரமாக ஓடிக் கம்பியைப் பிடித்துக்கொண்டு படியில் ஏறினேன். எனக்குப் பின்னால் அந்தப் பெண்ணும் பரபரப்போடு வந்து நின்றாள். பஸ்ஸிலிருந்து ஒருவர் கீழே இறங்கினார். 'ஸார், ஏறுங்க!'' என்றான் கண்டக்டர் என்னைப் பார்த்து. எனக்குப் பின்னால் அந்தப் பெண்ணும் பஸ்ஸில் ஏற முயற்சித்தபொழுது கண்டக்டர் அவளைத் தடுத்து, ''அம்மா, ஒரு ஆளுக்குத்தான் இடம் இருக்குது; இறங்குங்க!'' என்றான். பாவம், அந்தப் பெண் தயங்கினாள். ''அந்தப் பெண்ணையும் ஏற்றிக்கொள்ளு அப்பா, பாதகமில்லை!'' என்றேன் நான். அவன் முகத்தைத் தயவோடு பார்த்து, ''இல்லை, ஸார்! ஓவர்லோடு ஏத்தமாட்டோம்!'' என்றான் அவன் கண்டிப்பாக.

பாவம், அந்தப் பெண் இந்த வெய்யிலில் நின்று தவிப்பதைவிட நாம்தான் அடுத்த பஸ்ஸுக்காகச் சிறிது நேரம் காத்துக் கொண்டிருப்போமே என்று எனக்குத் தோன்றியது. சட்டென்று நான் கீழே இறங்கினேன். நான் இறங்கியதுதான் தாமதம்; அந்தப் பெண் பஸ்ஸில் ஏறிக் கொண்டு 'தாங்ஸ்' என்ற சிறிய வார்த்தையில் தன் முழு நன்றியையும் எனக்குத் தெரிவித்துக் கொண்டாள்.

டணி ஓடிக்கொண்டிருந்தது. வெய்யிலும் அதி உக்கிரமாக இருந்தது. அந்தச் சமயத்தில் என்னுடைய பொறுமை தளராததற்குக் காரணம் இன்னொரு ஜீவனுக்கு இரங்கித் தன்னலம் கருதாத தியாகம் ஒன்றைச் செய்த ஆறுதல்தான். அந்தப் பெண் என்னைத் தன் மனதார வாழ்த்திக் கொண்டிருப்பாள். இந்தச் சமயத்தில் அவளுக்கு நான் செய்த உபகாரத்தை அவள் தன் ஆயுளில் என்று நினைத்தாலும் எனக்கு நன்றி செலுத்தித்தானாகவேண்டும். இப்படியாக நான் செய்த பெருபகாரத்தைப் பற்றி நானே எண்ணி வெய்யிலில் நின்று உருகிக் கொண்டிருக்கும்பொழுது எனக்குப் பின்னால் சில பெண்கள் வந்து நின்றார்கள். எண்ணிப் பார்த்தேன்; ஐந்து பெண்கள். அவர்கள் மாணவிகளோ உபாத்தியாயினிகளோ எனக்குத் தெரியாது. அவர்களும் பதினைந்தாம் நம்பர் பஸ்ஸைத்தான் எதிர் பார்க்கிறார்கள் என்று ஜாடையாகத் தெரிந்தபொழுது என் மனம் திக்கென்றது. வரப் போகிற பஸ்ஸில் என்னைச் சேர்த்து ஆறு பேருக்கல்லவா இடம் வேண்டும்? இடமில்லாவிட்டால்......அதைப் பற்றி நான் ஏன் கவலைப்பட வேண்டும்? நாம் முண்டியடித்துக் கொண்டு முதலில் ஏறி அகப்பட்ட இடத்தைப் பிடித்துக்கொள்ள வேண்டியதுதான்!

பஸ் வந்தது; அது நிற்பதற்குள் பாய்ந்து ஏறினேன். கண்டக்டர் வழியை மறித்து, ''இருங்க, ஸார்! இறங்குறவங்க இறங்க



# இருதய பாவம்!




வேணும்?" என்றான். நான் படியிலிருந்த வாறே கம்பியைப் பிடித்துக் கொண்டு வழியைவிட்டு ஒதுங்கி ஒட்டி நின்றேன். எனக்குப் பின்னால் அந்த ஐந்து பெண்களும் பதட்டத்தோடு வந்து நின்றார்கள். வண்டியிலிருந்து இரண்டு பேர் இறங்கினார்கள். நான் ஏறுவதற்குப் பிரயத்தனம் செய்த பொழுது கண்டக்டர் என்னைத் தடுத்து, "இருங்க, ஸார்! முதலில் பெண்பிள்ளைகள் ஏறட்டும்" என்று சொல்லி, "வாங்க அம்மா, வாங்க!" என்று அவர்களை உபசரித்தான். அந்தப் பெண்கள் பஸ்ஸில் ஏறிக் கொண்டனர். கண்டக்டர் ஒரு தடவை பஸ்ஸினுள் அவர்களை எண்ணிக் கணக்குப்பார்த்து விட்டு, "ஸார்! உங்களுக்கு இடமில்லை; இறங்குங்க!" என்றான்.

நான் எவ்வளவு நேரமாக வெய்யிலில் நின்று துடித்துக் கொண்டிருக்கிறேன் என்பது அந்தப் பெண்கள் ஐந்து பேரில் ஒருவர் மனதிலாவது தோன்றியதா? கொஞ்சமாவது பச்சாதாபமும் கருணையும் ஏற்பட்டதா? ஊஹூம்! 'பெண்களுக்காக இரக்கப்பட வேண்டியதும் கருணை காட்ட வேண்டியதும் ஆண்களின் விதி' போலிருக்கிறது. இல்லாவிட்டால் அந்தக் கண்டக்டர் முதலில் ஏறிய என்னைக் கீழே இறங்கு என்று சொல்லி விட்டு அந்த ஐந்து பெண்களையும் வண்டியில் ஏற்றிக் கொள்வானா? நான் ஒரு பெண்ணுக்குக் கருணை காட்டியதில் பெருமையடைந்தேனே? அந்தக் கண்டக்டர் என்னை விட நான்கு மடங்கு அதிகக் கருணையல்லவா காட்டி விட்டான்?

அதற்குப் பிறகு குறைந்தது முக்கால் மணி நேரமாவது அங்கே நான் நின்றிருப்பேன். வெய்யிலின் கொடுமை தலை வெடித்து விடும்போலிருந்தது. தலையில் மேல் துண்டை உதறிப் போட்டுக் கொண்டு கிளம்பினேன். 'இந்த வெய்யிலில் நிற்பதைவிட நடந்தால் இடையிடையே சிறிது மர நிழலாவது இருக்கும். அதோடு மட்டுமல்ல; ஒன்றரை அணா காசை மிச்சம் பிடித்தோமென்ற திருப்தியாவது இருக்கும்' என்ற எண்ணத்தில்தான் நடக்கலானேன்.

நான்கடி கூட நடந்திருக்க மாட்டேன்; எனக்குப் பின்னால் ஒரு பஸ் வருவதுபோல் தோன்றியது. திரும்பிப் பார்த்தேன். பதினெட்டாம் நம்பர் பஸ்தான்! அதைப் பிடிக்கத் திரும்பி ஓடினேன். அதற்குள் பஸ் கிளம்பி விட்டது. கிளம்பினால் என்ன? எனக்கிருந்த ஆத்திரத்தில் பாய்ந்தாவது பிடித்து விடலாம் என்று தோன்றியது. மறுகணம் ஓடிப் பாய்ந்து கம்பியைப் பிடித்தேன். கம்பி கையில் பிடிபடாமல் வழுக்கியது; அதற்கப்புறம் அந்தப் பஸ்ஸிலேயே தான் என்னை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வந்தார்களாம்!

தலையில் பலமான காயம். ஆஸ்பத்திரி கட்டிலில் படுத்திருக்கும் போதுதான் நடந்த நிகழ்ச்சிகளெல்லாம் ஞாபகத்திற்கு வந்தன.

எனக்குச் சிசுருஷை செய்து வந்த 'நர்ஸ்' என்னைப் பார்த்து, "இன்று மத்தியானம் ஒரு மணி சுமாருக்கு நீங்கள் தானே பதினெட்டாம் நம்பர் பஸ் ஸ்டாப்பிங்கில் காத்திருந்தீர்கள்?" என்றாள்.

நான் அந்தப் பெண்ணை உற்றுப் பார்த்தேன்; இரண்டாவதாக வந்த பஸ்ஸில் கண்டக்டரின் கருணைக்குப் பாத்திரமாகி இடம்பெற்ற ஐந்து பெண்களில் ஒருத்தி அவள் என்பது எளிதாக விளங்கியது. "ஆமாம், நான்தான் காத்திருந்தவன்" என்றேன்.

"ஐயோ பாவம்! ஏன் உங்களுக்கு இந்த ஆபத்து?" என்றாள் பரிதாபத்துடன்.

நான் ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டே "உலகத்தில் கருணை காட்டிய மகான்களுக்கெல்லாம் இப்படிப்பட்ட கதிதான் ஏற்பட்டிருக்கிறது!" என்றேன்.

பாப்பா மலர்

# ஐம்பது

முன்னொரு காலத்தில் ஹரான் என்னும் நாட்டை சக்திவாய்ந்த, செல்வம் நிறைந்த ஒரு மன்னன் ஆண்டு வந்தான். மன்னன் மிகவும் சாமர்த்தியமாகவும் நீதி தவறாமலும் தனது நாட்டை ஆண்டு வந்ததால் பிரஜைகள் அரசனிடம் விசுவாசமாக இருந்தனர். இந்த அரசனுக்கு எல்லாவித சுகங்கள் இருந்தும் ஒரு குறை அவன் மனத்தை வாட்டி வந்தது. தனக்குப் பின் அந்த நாட்டை ஆளச் சந்ததி இல்லையே என்று வருந்தினான். தனக்குப் பின்னர் அந்நியர் கையில் நாடு அகப்பட்டுத் தவிக்குமே என்று கவலையடைந்தான். தனக்கு ஆண் பிள்ளை பிறந்து, அந்தக் குழந்தையைத் தன்னைப் போலவே நாட்டைத் திறமையுடன் அரசாள அருள் புரியுமாறு கடவுளை தினம் பிரார்த்தித்து வந்தான்.

கடைசியில் அரசனின் பிரார்த்தனைக்கு ஆண்டவன் செவிசாய்த்தான். ஒரு நாள் இரவு அரசனின் கனவில் ஒரு மகான் தோன்றினார். "உன் ஆசை நிறைவேறும். நாளைக் காலையில் தூங்கி எழுந்தவுடன் உன் தோட்டத்திற்குச் செல். தோட்டக்காரனிடம் சொல்லி ஒரு மாதுளங்கனி கொண்டு வரச்சொல்லி அதன் முத்துக்களில் எத்தனை வேண்டுமோ அத்தனை சாப்பிடு. சீக்கிரத்தில் நீ விரும்பிய விதமே நடக்கும்" என்று அந்த மகான் கூறி மறைந்தார்.

அதிகாலையில் எழுந்து மகான் கூறியபடி மாதுளை முத்துக்களில் ஐம்பதை மன்னன் உட்கொண்டான். அரசனுக்கு ஐம்பது மனைவிகள் இருந்தனர். கனவு கண்டு ஒரு வருஷத்திற் கெல்லாம் அரசனின் மனைவிகள் ஒவ்வொருவருக்கும் ஒரு ஆண் குழந்தை பிறந்தது. மன்னனின் ஐம்பது ராணிகளில் ஒருத்தியான பிரோஸ் என்பவள் அரசனின் உறவினனான ஸமாரியா மன்னனின் ராஜ்யத்திலிருக்கும் பொழுது அவளுக்குக் குழந்தை பிறந்தது. இந்தச் செய்தி ஹரான் அரசனுக்குத் தெரிந்தவுடன் பிரோஸின் குழந்தையைத் தனது ராஜ்யத்திலேயே வளர்த்து வரும்படி ஸமாரியா அரசனுக்குத் தெரிவித்தான். மற்ற நாற்பத்தொன்பது குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பு தனக்கிருந்ததால், பிரோஸின் குழந்தை கடோதரனை அங்கேயே ஒரு அரசகுமாரனை வளர்க்க வேண்டிய முறையில் வளர்க்கும்படியும், தான் விரும்பும் வரையில் இளவரசனை ஸமாரியா நாட்டிலேயே வைத்துக் கொள்ளும்படியும் தெரிவித்திருந்தான்.

இவ்வாறாக ராணி பிரோசும், இளவரசன் கடோதரனும் ஸமாரியா நாட்டில் வசித்து வந்தனர். அரசகுமாரனுக்கு வேண்டிய சகல குணங்களும், வீரமும் அமையும் முறையில் கடோதரனுக்கு ஸமாரியா அரசன் பயிற்சியளித்து வந்தான். கடோதரன் எல்லாவித சுகங்கள் இருந்தும் தன்



# இளவரசர்கள்

ரா. நா.




தந்தையையும் சகோதரர்களையும் பிரிந்து வாழ்வது குறித்து வருந்தினான். ஒரு நாள் தன் அன்னையிடம் சென்று தன் மனதிலுள்ள குறைகளைப் பின்வருமாறு தெரிவித்தான்.

"அம்மா! ஸமாரியாவில் நான் நடத்தி வரும் சுக வாழ்வு எனக்குச் சலித்து விட்டது. போரில் வெற்றி பெற்றுப் பெயரும் புகழும் நான் அடைய ஆசைப்படுகிறேன். வெளிநாட்டுக்குப் போய் நான் புகழ் பெறத் தாங்கள் எனக்கு அனுமதி அளிக்க வேண்டும். என் தந்தை ஹாரான் அரசர் என்னை ஏன் அழைத்துக் கொள்ளவில்லை? நான் அவருடனிருந்தால் அவருடைய எதிரிகளைப் போரில் வென்று அவருக்கு உதவி புரிவேனே; அவருக்கு உதவும் பெருமை என் சகோதரர்களுக்கு மட்டும்தானா, எனக்கில்லையா? என்றால் இனி காத்திருக்கவே முடியாது. என் தந்தை என்னைக் கூப்பிடா விட்டாலும், ஒரு அன்னியன் மாதிரி நானே அவரிடம் செல்லுகிறேன். அவர் முன் சென்று 'உங்கள் படையில் சேர்ந்து போர் புரிய அனுமதியுங்கள்' என்று வேண்டுகிறேன். என் வீரத்தை அவர் அறியும்படி செய்யும் வரையில் நான் யார் என்பதை அவருக்குத் தெரிவிக்கமாட்டேன். கடைசியில் நான் அவருடைய மகன் என்றறிந்தால் அவரே பெருமை கொள்வார். இவ்வாறு செய்தால் நான் அவருடைய மகன் என்ற காரணத்தால் என்னை மதிப்பதற்குப் பதிலாக என் பராக்கிரமத்திற்காக என்மீது ஆசை கொள்வார்."

தன் மகனின் மனக் கவலையையும் ஆசையையும் அறிந்த ராணி அவனுடைய உயர்ந்த நோக்கத்தைப் பாராட்டி அவன் இஷ்டப்படியே செய்ய அனுமதித்தான்.




தன் உண்மையான நோக்கத்தை ஸமாரியா அரசனிடம் கூறினால் தன்னை வெளியே செல்ல விடமாட்டான் என்று கருதி கடோதரன் வேட்டைக்குச் செல்லுவதாக அம்மன்னனிடம் சொல்லி விட்டுப் புறப்பட்டான்.

இளவரசன் ஒரு வெள்ளைக் குதிரை மீது ஏறிச் சென்றான். குதிரைச் சேணம் தங்கமும், பட்டும் முத்துக்களும் கலந்து தயாரிக்கப்பட்டிருந்ததனால் ஒரே பளபளப்பாயிருந்தது. இளவரசனும் ஆடம்பரமான உடை தரித்திருந்தான். அவன் தோள்மீது வில்லும், அம்புகள் நிரம்பிய அம்பறாத் தூணியும் தொங்கின. இடையிலே மின்னல் போல் பிரகாசிக்கும் வாள் தொங்கிக் கொண்டிருந்தது. வாளுக்கு வைரத்தாலான பிடி அமைக்கப்பட்டிருந்தது.

ஹாரான் தேசத்தை அடைந்தவுடன் இளவரசன் நேராகத் தன் தந்தையிடம் சென்றான். தான் கெய்ரோ நகர்ப் பிரபு ஒருவனின் குமாரன் என்றும், பெயரும் புகழும் பெற உலகத்தைச் சுற்றி வருவதாகவும், மன்னனின் படையில் சேர விரும்புவதாகவும் தெரிவித்தான். தன் முன் தோன்றிய இளைஞனின் வசீகரமான தோற்றத்தையும், வீரப் பார்வையையும் கண்டு மயங்கி, மன்னன் அவனுக்குத் தன் படையில் ஒரு உயர் பதவி அளித்தான். வெகு சீக்கிரத்தில் இளவரசன் ஹாரான் ராணுவத்தினர் நன்மதிப்பைப் பெற்றான். அவன் தனது பராக்கிரமச் செயல்கள் மூலம் மன்னனின் அன்புக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமானான். கடோதரன் எப்பொழுதும் தன் அருகில்லாவிட்டால் மன்னனுக்குத் திருப்தி ஏற்படுவதில்லை.

கடோதரனைக் கண்டு பொறாமைப் பட்டவர்கள் அவனுடைய நாற்பத்தொன்பது சகோதரர்கள்





தான். தங்களை விட அதிகமாக அரசனின் அன்பைப் பெற்ற அந்த இளைஞன் தங்கள் சகோதரன் என்பது அவர்களுக்குத் தெரியாது. மன்னன் கடோதரனை மற்ற இளவரசர்களுக்குப் பயிற்சியளித்துப் பாதுகாக்கும் ஆசானாக நியமித்தவுடன் அவர்களுடைய வெறுப்பு கட்டுக்கடங்காமல் பெருகியது. எவ்வாறாயினும் அந்த 'அன்னிய'னை ஒழித்து விடுவது என்று அவர்கள் சபதம் செய்துகொண்டனர். நேரடியாக அவனைக் கொன்றிருப்பர் மற்ற இளவரசர்கள். ஆனால் அக்கொடுஞ் செயல் மூலம் மன்னன் தங்கள் மீது ஆத்திரம் கொண்டு தண்டித்துவிடப் போகிறானே என்று பயந்து மன்னனுக்குக் கடோதரன் மீது வெறுப்பு ஏற்படுவதற்கான சூழ்ச்சி செய்தனர்.

தனியே சென்று வேட்டையாடத் தங்களை அனுமதிக்கும்படி கடோதரனைக் கேட்பது என்று முடிவு செய்தனர், அப்படி வேட்டையாடச் செல்லுகையில் எங்கேயாவது ஒளிந்து கொள்ளலாம் என்று திட்டம் செய்தனர். தங்களைக் காணாமல் மன்னர் தவித்து அப்படிக் காணாமற் போனது கடோதரனின் கவனக் குறைவினால் என்று எண்ணி அவனைக் கொன்று விடுவார் என்று மற்ற இளவரசர்கள் நினைத்தனர்.

இந்தத் திட்டப்படி இளவரசர்கள் கடோதரனிடம் சென்று தங்களைத் தனியே வேட்டையாட அனுமதித்தால் வேட்டையை முடித்துக் கொண்டு மாலையில் திரும்பி விடுவதாகக் கூறினர். இளவரசர்களின் உண்மை நோக்கத்தை அறியாத கடோதரனும் அவர்களுக்கு அனுமதி அளித்தான். ஆனால் மாலையில் இளவரசர்கள் திரும்பி வரவில்லை. மூன்று நாட்களாகியும் இளவரசர்களைப் பற்றிய தகவலைக் காணோம். மன்னன் கடோதரனை அழைத்து இளவரசர்கள் ஏன் திரும்பி வரவில்லை என்று கேட்டான். நடந்ததையெல்லாம் சொல்லி, இளவரசர்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்று கடோதரன் மரியாதையாகத் தெரிவித்தான். ஆனால் நான்காவது நாளும் இளவரசர்கள்



திரும்பி வராததைக் கண்டு மன்னன் கோபம் கொண்டான். உடனே கடோதரனைக் கூப்பிட்டு, "புத்தியற்ற அன்னியனே! உன் கடமையைச் செய்யத் தவறிவிட்டாய். என் குமாரர்களை ஏன் தனியே செல்ல அனுமதித்தாய்? உடனே சென்று அவர்களைக் கொண்டு வா. இல்லையேல் உன் உயிரை வாங்கி விடுவேன்!" என்று உரக்கக் கூறினான்.

தன் தந்தைக்கு உதவி செய்வதற்குப் பதிலாக, அவருக்குக் கோபமும் கவலையும் ஏற்படும்படி செய்ததற்குக் கடோதரன் வருந்தினான். உடனே தன் குதிரை மீதேறி இளவரசர்களைத் தேடுவதற்குப் புறப்பட்டான். ஊர் ஊராகச் சென்று ஒவ்வொரு இடத்திலும் இளவரசர்கள் அந்தப் பக்கம் வந்தனரா என்று விசாரித்தான். எங்கு தேடியும் அவர்கள் அகப்படாமல் கடைசியில் மனித சஞ்சாரமற்ற ஒரு இடத்திற்குச் சென்றான். அந்தச் சமவெளியின் மத்தியில்

---

## ஏமாற்றம்!



ஒரு நரி மற்றொரு நரியிடம்:— சீச்சீ! ஒரு திராட்சைப் பழம் கூடக் காய்க்கவில்லையே! 'சீச்சீ! இந்தப் பழம் புளிக்கும்' என்று சொல்வதற்குக்கூட ஒரு பழம் இல்லையே!

கருப்பு சலவைக் கல்லால் அமைக்கப்பட்ட ஒரு பெரிய அரண்மனை தெரிந்தது. அந்த அரண்மனை பார்ப்பதற்கு வெகு அழகாக இருந்தது. அந்த அரண்மனைக்குச் சென்று, திறந்திருந்த ஒரு ஜன்னலின் வழியாக உள்ளே உற்றுப் பார்த்தான். ஜன்னல் கம்பிக்குப் பின் ஒரு அழகிய பெண் நின்று கொண்டிருந்ததைக் கண்டான். அவள் உடை கந்தலாக இருந்தது. அவளுடைய நீண்ட கூந்தல் அலங்கோலமாக இருந்தது. அவளுடைய முகத்தில் அளவு கடந்த வருத்தம் ததும்பியிருந்தது. கடோதரனைக் கண்ட அந்த அழகி பயந்த குரலில் "இளைஞனே! உடனே இவ்விடத்தை விட்டுப் போ. இங்கே குரூரமான கருப்பு ராக்ஷஸன் ஒருவன் இருக்கிறான். அவன் மனிதர்களைக் கண்டால் கொன்று தின்று விடுவான். இங்கே வருபவர்களைப் பிடித்து இருட்டறையில் அடைத்து தனக்குப் பசிக்கும் போது அவர்களைக் கொன்று தின்பான். உன்னைக் கண்டால் விடவே மாட்டான். அவன் வருவதற்குள் போய்விடு" என்று கடோதரனை வேண்டிக் கொண்டாள்.



"அம்மணி! உங்களை இந்த மடியும் படி விட்டு விட்டு நான் திரும்பிப்போக முடியாது. நீங்கள் யார்? உங்களுக்கு இந்தக் கதி எப்படி நேர்ந்தது? அதைக் கொஞ்சம் சொல்லுங்கள்" என்று கேட்டான். அழகியும் தன் கதையைச் சொல்ல ஆரம்பித்தாள். (தொடரும்)

# இரண்டு சிறுவர்கள்

**ராஜன்**

ஒரு நாள் ஒரு பணக்காரச் சிறுவன் ஒரு கிராமத்துக்குப் போனான். அங்கே ஒரு அழகிய குளம் இருந்தது. அதில் நீந்த வேண்டுமென்று அவனுக்கு ஆசை உண்டாயிற்று. உடனே அதில் குதித்தான். வெகு தூரம் போய் விட்டான். திரும்பி வர அவனால் முடியவில்லை. களைத்துப் போய் விட்டான். உடனே, "ஐயோ, என்னைக் காப்பாற்றுங்கள்! காப்பாற்றுங்கள்!" என்று கத்தினான். அப்போது அவனைப்போல மற்றொரு சிறுவன் அங்கே மாடு மேய்த்துக் கொண்டிருந்தான். அவன் குளத்தில் குதித்தான். சிறுவனைக் கொண்டு வந்து பத்திரமாகக் கரை சேர்த்தான். பிழைத்துக்கொண்ட அந்தச் சிறுவன் இடைப் பையனுக்கு நன்றி தெரிவித்து விட்டு, தன்னுடைய சொந்த ஊராகிய லண்டனுக்குப் போய் விட்டான்.

பல வருஷங்கள் கழிந்தன. அந்தப் பணக்காரச் சிறுவன் இப்பொழுது நல்ல வாலிபனாகி விட்டான். ஒரு நாள் அவன் பழைய கிராமத்துக்குப் போனான். அந்த இடைப் பையனைப் பார்த்தான். "உனக்கு நான் ஏதாவது உதவி செய்ய வேண்டுமா?" என்று கேட்டான். "எனக்கு வைத்தியம் படிக்க வேண்டுமென்று ரொம்ப ஆசையாக இருக்கிறது" என்றான் இடையன். "நல்லது. என்னுடன் புறப்பட்டு வா!" என்று சொல்லி விட்டு அந்தப் பணக்கார இளைஞன் இடையனைத் தன்னுடன் லண்டனுக்கு அழைத்துக் கொண்டு போனான்.

ஒன்றன்பின் ஒன்றாகப் பல வருஷங்கள் கழிந்தன. இடைப் பையன் வைத்தியக் கல்லூரியில் சேர்ந்து படித்தான். பட்டம் பெற்றான். புகழ்பெற்ற டாக்டரானான். உலகம் முழுவதும் கண்டு வியக்கும் பெனிஸிலின் மருந்தைக் கண்டு பிடித்தான். அந்த இடைப் பையன்தான் டாக்டர் அலெக்ஸாண்டர் பிளெமிங்.

பல வருஷங்கள் கழிந்தன. பணக்கார இளைஞன் கிழவனும் விட்டான். சர்க்காரிலே மிகவும் பெரிய பதவிக்கு வந்துவிட்டான். ஒருநாள் அவனுக்குக் கடுமையான ஜுரம் கண்டது. டாக்டர்கள் என்னென்னவோ மருந்துகள் எல்லாம் கொடுத்துப் பார்த்தார்கள். நோய் குணமாகவில்லை. கடைசியில் அவன் பிழைக்க மாட்டான் என்று சொல்லி விட்டார்கள். அப்போது திடீரென்று வேறொரு டாக்டர் அங்கு வந்தார். அவர் கிழவனுக்குப் பெனிஸிலின் ஊசி போட்டார். அவன் பிழைத்துக் கொண்டான். இடைப் பையனான டாக்டர் பிளெமிங் மறுபடியும் அவனைக் காப்பாற்றி விட்டார்.

அந்தப் பணக்கார இளைஞன்தான் பிற்காலத்தில் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக விளங்கிய வின்ஸ்டன் சர்ச்சில்!












# வட்ட மேஜை

## ★ பகைவனுக் கருள்வாய்!

எனக்குப் பாரதியாரின் "பகைவனுக் கருள்வாய்" என்ற பாடல் மீது அலாதிப் பற்றுண்டு. அதன் கருத்தை இத்தனை அழகாகத் தங்கள் ஓவியர் 3ம் தேதி 'கல்கி' இதழ் அட்டையில் தீட்டியதைக் கண்டு பெரிதும் மகிழ்ந்தேன்.

ஆனால் தாங்கள் அந்தப் பாடலுக்கு வரைந்திருக்கும் விளக்கத்தில் தவறு ஒன்று இருக்கிறது. பாரதியார் காந்திமகானின் அஹிம்சைக் கொள்கையைப் பற்றி அறிந்த பின்னர் அந்தப் பாடலை இயற்றவில்லை. மகாத்மா காந்தி இந்தியாவில் காலடி எடுத்து வைத்து, அஹிம்சா போதனையை ஆரம்பிப்பதற்குப் பல வருஷங்களுக்கு முன்பே பாரதியார் இந்தப் பாடலை இயற்றிவிட்டார். பாரதியார் புதுவையிலிருந்த போது, ஆள் என்னும் கொண்ட உளவாளி ஒருவன் பாரதியாரிடம் நண்பன்போல நடித்து அவரை ஏமாற்றிப் புதுவைக்கு வெளியே அழைத்துச் சென்று விட்டான். சரியான சமயத்தில் சில நண்பர்கள் பாரதியாரைக் காப்பாற்றி அழைத்து வந்தார்கள். நண்பர்களுக்கெல்லாம் அந்த உளவாளியை உயிரோடு வைக்க வைத்துவிட வேண்டுமென்று ஆத்திரம். பாரதியார் அவர்களைச் சமாதானப்படுத்தி மேற்கண்ட அற்புதமான பாட்டைப் பாடினார்.

வேதாந்தமும் கீதையும் கற்றுத் தெளிந்த பாரதிக்கு மற்றொருவர் உணர்த்தித்தான் பொறுமைக் குணம் வர வேண்டிய அவசியம் இல்லையல்லவா?

சென்னை
4—9—49 வே. சுப்பிரமணியன்

[இந்தத் திருத்தத்தை நாம் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொள்கிறோம். காந்தி மகானின் தத்துவங்களையெல்லாம் பாரதியார் முன்னதாகவே தம் பாடல்களில் அமைத்துப் பாடித் தமிழ்நாட்டைக் காரியத்துக்குத் தயார்ப்படுத்தி வைத்திருந்தார் என்பதை ஆஸ்தான கவிஞர் நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை அவர்கள் எட்டயபுரம் பாரதி விழாப் பிரசங்கத்தில் நன்கு விளக்கியிருக்கிறார்கள். — ஆசிரியர்]

○●○

## பாலும் நெய்யும்

சென்னை கார்ப்பரேஷன் சுகாதார அதிகாரிகளும் வெளியூர்களில் முனிஸிபல் அதிகாரிகளும் பால்காரர்களை பாலில் தண்ணீர் கலக்கும் குற்றத்திற்காகவும், நெய் வியாபாரிகளை நெய்யில் கொழுப்பு கலக்கும் குற்றத்திற்காகவும் தண்டித்து வருகிறார்கள். இது ரொம்பவும் நல்லதுதான். ஆனால் அதே பாலும் நெய்யும் ஹோட்டல்களுக்குள் சென்றுவிடின் பிறகு '[illegible]' அவர்களுடைய கவனத்திற்கு வருவதில்லை போலும்! ஒரு படி பாலுக்கு நான்கு அல்லது ஐந்து படி தண்ணீர் கலப்பு! நெய்யுடன் டால்டா அல்லது வேறு மட்ட எண்ணெய்கள் கலக்கப்படுவது சர்வசாதாரணமாகி விட்டது. சாப்பாட்டு ஹோட்டல்களிலும் மட்ட ரக நெய்தான் போடுகிறார்கள். ஒரிரண்டு ஹோட்டல்களைத் தவிர. சென்னை சம்பந்தப்பட்ட வரை மற்றெல்லா ஹோட்டல்களிலும் ஒரு 'கப்' பால் கொண்டு வரச் சொன்னால் நிச்சயமாக ஒரு 'கப்' 'வெள்ளை-வெந்நீர்' சப்ளை செய்யப்படுகிறது. மேற்சொன்னபடி பொதுஜன சுகாதாரத்திற்குப் பங்கம் விளைவிக்கக்கூடிய முறையில் தயாரிப்புகளுக்கும் ஹோட்டல்களுக்குச் சுகாதார அதிகாரிகள் லைசென்ஸ் கொடுக்கக் கூடாது. பொது ஜனங்களும் கண்டிப்பாக பகிஷ்கரிக்க வேண்டும். அதோடு கூட எந்த ஹோட்டலைக் கண்டாலும் உள்ளே நுழைந்து ஏதாவது சாப்பிட வேண்டுமென்ற கெட்ட பழக்கத்தைக் குடும்பஸ்தர்களும் சம்சாரிகளும் கூடியவரை நிறுத்தப் பழகினால் அவர்களுக்கும் க்ஷேமம்; நாட்டின் சுகாதாரமும் சீர்கேடடையாமலிருக்கும். சர்க்கரை, காப்பிக்கொட்டைப் பஞ்சமும் ஒழியும்!

சென்னை
5—9—49 ஆர். ஸ்ரீனிவாசன்

○●○

## சென்னையில் கல்(கந்)தா!

மேற்கு வங்க உபதேர்தலில் காங்கிரஸ் தோற்றதன் காரணம் அங்குள்ள காங்கிரஸ் மகாசபையில் மலிந்திருந்த ஊழல்கள். அங்கு வெற்றி பெற்றது ஓர் மாஜி காங்கிரஸ் தியாகியே! ஆனாலும் காங்கிரஸின் தோல்வி எல்லோர் கண்களையும் திறந்தது.

இன்று நம் மாகாண ஜில்லா போர்டு தேர்தலில் சில இடங்களில் காங்கிரஸ் அடைந்திருக்கும் தோல்வியைக் கண்டு எந்த உண்மை தேசிய வாதியும் வெட்கித் தலை குனியாதிருக்கமாட்டான். இங்கு காங்கிரஸை எதிர்த்து வெற்றி பெற்றவர்கள் மாஜி காங்கிரஸ் தியாகிகளான சுதந்திரர்களல்ல! தியாகம், தேசியம் என்றால் என்ன விலை என்று கேட்கும் பேர்வழிகள். ஜாதியின் பெயரால், வகுப்புவாதத்தின் பெயரால் பணத்தை வாரி இறைத்துப் பட்டங்களைப் பெறப் பறந்து பாடுபட்டவர்கள் வெற்றி பெற்றிருக்கிறார்கள். இவைகளுக்குக் காரணம் என்ன? மக்கள் மனதில் காங்கிரஸின் மீதுள்ள நம்பிக்கை குன்றி விட்டதா? தமிழ் நாட்டில் வகுப்புவாதம் வேரூன்றி விட்டதா? அல்லது மேற்கு வங்கத்தைப்போல் இங்கும் காங்கிரஸில் ஊழல்கள் நிறைந்துவிட்டதா? ராஜாஜி போன்ற அரும் பெரும் தியாகிகளை ஈன்ற தமிழ்நாட்டுக் காங்கிரஸின் தியாக உணர்ச்சி குன்றிவிட்டதா?

எங்கு பார்க்கினும் சர்க்காரின் வரி விதிப்பைப் பற்றிய பேச்சாயிருக்கிறது. அதையே எதிரிகள் தங்கள் வெற்றிக்காகப் பிரசாரம் செய்ய முதல் உபாயமாகக் கொண்டார்கள். இன்றைய சர்க்காருக்கும் மக்களுக்கும் இடையே தொடர்பு அற்றிருக்கிறது. மக்கள் மனமறிந்து வரி விதிப்பதை விட்டு மந்

வேண்டு மென்ற ஆசையால் நான் தமிழ் கற்றுக்கொண்டேன். உங்களுக்கு என்னுடைய நன்றி. எப்பொழுது வாரமாகுமோ, 'கல்கி' வருமோ. அவ்வோசையில் சீதாவினுடைய கஷ்டங்கள் எப்படி இருக்குமோ என்று பல எண்ணங்களைக் கனவில் ஒரு நாள் முன்பே காண்பேன். என் தினசரி வாழ்க்கையில் உங்களுடைய 'கல்கி' எனக்கு எவ்வளவோ சந்தோஷத்தையும், குதூகலத்தையும் கொடுக்கிறது. தெலுங்குப் புஸ்தகங்களை எவ்வளவோ படிக்கிறேன். தமிழர்களும் தெலுங்குப் புஸ்தகங்கள் வாரப் பத்திரிகைகள் படித்து ஏன் ரஸிக்கக் கூடாது? தமிழ், தெலுங்கு, ஹிந்தி எல்லா பாஷைகளும் ஒவ்வொருவரும் கற்றுக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு ஜாதியாரும் அவர்களுடைய மாத்ரு பாஷையே பெரிதென்று கருதாமல், இதர பாஷைகளைப் பரிகாசம் செய்யாமல், எல்லா பாஷைகளுக்கும் சமானமாகக் கௌரவம் கொடுத்து கற்றுக் கொள்ள வேண்டியது நம்முடைய தர்மம். எல்லா பாஷைகளும் கற்று ஆனந்தத்துடன் ஒத்துழைக்க வேண்டியது நம் கடமை.

தாண்டூர்
3—9—49 — கே. வி. ருக்மணி அம்மாள்

[பாரத தேவியைச் 'செப்பு மொழி பதினெட்டுடையாள்' என்று வர்ணித்தார் பாரதியார். இந்தியாவின் பாஷைகள் எல்லாம் நம் சொந்த பாஷைகளே. ஆயினும் தாய்மொழியின் பேரில் ஒரு தனிப்பற்று இருப்பது மனித இயற்கை. பிற பாஷைகளைக் கற்று அவற்றில் உள்ள இலக்கியங்களைப் படித்து அநுபவிக்கும் ஆற்றல் எல்லாருக்கும் எளிதில் வராது. தங்களுக்கு அந்த ஆற்றல் இருப்பது மகிழ்ச்சிக்குரியது. சகோதர பாஷைகளைக் கற்க முடியாவிட்டாலும் அவற்றை வெறுப்பதோ, பரிகசிப்பதோ முற்றும் தவறான காரியம்.—ஆசிரியர்]

○●○

## வீர ரமணி தாரிணி

மத வெறி மனித சமூகத்தை ராட்சத சமூகமாக்கி எவ்வளவு கோரக் கிருத்யங்களுக்கு உள்ளாக்கி விடுகிறதென்பதை வீர ரமணி தாரிணியின் எழில் வடிவத்தின் கோர மாறுதலைச் சித்திரத்தின் மூலம் விளக்கி யிருக்கிறீர்கள்.

தாரிணியோ வெனில், தன்னுடைய வனப்பு வாய்ந்த எழில் வடிவம் சிதைபட்டு, ஒரு கையும் ஒரு கண்ணும் இழந்து, கோரஸ்வரூபமாக மாறிவிட்ட பிறகும் உள்ளத்தின் எழில் குன்றாமல் இன்னும் பன்மடங்கு பிரகாசமாய்க் குன்றின் ஏற்றி வைத்த விளக்காகக் கடாக்ஷித்துச் சோபிக்கிறாள்.

தாரிணியின் மாத்ரு பக்தி, சகோதர வாஞ்சை, அஞ்சா நெஞ்சம், சலியாத தியாக உள்ளம், சமயோசித புத்தி, சஞ்சலமற்ற அமைதி நிரம்பிய சுபாவம் இவைகளைப் பார்க்கும்போது புகழ்பெற்ற பாரத நாட்டின் ஜான்ஸி ராணி, துர்க்காவதி போன்ற வீர குல நாரீமணிகளின் ஞாபகந்தான் வருகிறது.

கோமல்
19—8—49 — வி. ராஜாப்பான்

## வரியும் பிரசாரமும்

எங்கள் இராமநாதபுரம் ஜில்லா போர்டு தேர்தலில் காங்கிரஸை எதிர்த்த இதர கட்சியினர் சார்பில் பொதுக் கூட்டங்களில் பேசியவர்களெல்லாம் சென்னை சர்க்காரின் வரித் திட்டத்தைத்தான் குறிப்பிட்டார்கள். அதாவது "பாலுக்கு வரி, புளிக்கு வரி, மஞ்சள் பெட்டியில் வோட் செய்த நமக்கும் பிரதியுபகாரம் மஞ்சளுக்கு வரி. இப்படி வெள்ளம் போடுவது நியாயம் தானா என்று மந்திரியை யார் கேட்டாலும் கோபம் வருகிறது. அகந்தையுடன் 'அப்படித்தான் போடுவோம்' என்று பதில் கூறுகிறார்கள். ஆம்; அந்த இறுமாப்பிற்கு நாம் பதில் கொடுக்க முடியும். எப்படி யென்றால் ஜில்லா போர்டு தேர்தலில் மஞ்சளல்லாத மற்றப் பெட்டிகளில் வோட் செய்து நம்முடைய கசப்பு மனப்பான்மையைக் காட்ட வேண்டும்" என்று பிரசாரம் செய்தார்கள்.

ராமநாதபுரம்
2—9—49 — மு. வி. மு. முருகேசன்

○●○

## அவசர வரி விதிப்பு

பொருளாதார இலாகா அதிகாரிகள் பட்ஜட் தயாரிக்கும் விஷயத்திலே மிகவும் பொறுப்பற்ற முறையிலே நடந்து கொள்ளுகின்றார்கள். இல்லாவிடில் உத்தேச வரவு செலவுக் கணக்கிற்கும் முடிவான வரவு செலவிற்கும் கோடிக்கணக்கான ரூபாய்கள் வித்தியாசம் ஏற்படுமா? அது மட்டுமல்ல: இந்த ஆண்டு பட்ஜட் தயாரித்த பொழுது அவர்கள் இன்னும் ஒரு பெருந் தவறு செய்து விட்டார்கள். பல பொருள்களுக்குப் புதிதாக வரி போடுவதாக நிதி மந்திரி அறிவித்தாரல்லவா? உடனே அந்தப் பொருள்களின் விலைகளெல்லாம் விருவிரு என்று ஏறி விட்டன. பின்பு அவர்கள் வரி போடுவதாக அறிவிக்கப்பட்ட பொருள்களில் பெரும்பான்மையானவற்றிற்கு வரி விதிப்பதில்லை யென்று முடிவு கட்டப் பட்டது. இருப்பினுமென்ன? விலை ஏறியது ஏறியதேதான். அவைகளின் விலை இன்னும் இறங்கவில்லை.

கோவை
2—9—49 — எஸ். சதாசிவம்

○●○

## வோட்டுக்களைப் பார்க்கவும்

திருச்சி ஜில்லாவில் காங்கிரஸ் படுதோல்வி அடைந்தது என்பதை ஒரு தொகுதியின் காங்கிரஸ் அபேக்ஷகர் பெற்ற வோட்டுக்கள் எடுத்துக் காட்டுகின்றன. திருச்சி ஜில்லா பெரம்பலூர் தாலுகா வடக்குச் சர்க்கிளில் நான்கு சுயேச்சை அபேக்ஷகர்கள் முறையே 3284, 3022, 411, 389 வோட்டுக்கள் பெற்றிருக்க இவர்களுடன் போட்டியிட்ட காங்கிரஸ் அபேக்ஷகர் 86 வோட்டுக்களே பெற்றிருப்பது கவனிக்க வேண்டியதாகும்.

இவைகளிலிருந்து தேர்தல் அட்ஹாக் கமிட்டியார் அபேக்ஷகர்களைப் பொறுக்குவதில் பெரும் தவறு செய்திருப்பதோடு சுயநலமும் பதவிப் பித்தும் அங்கே தாண்டவமாடுகின்றன என்பதும் தெரிகிறது.

பக்லூர்பேட்டை
7—9—49 — கே. வி. எம்.

---

★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25ஐ 'பகைவனுக்கருள்வாய்!' என்ற கடிதம் எழுதிய சென்னை வே. சுப்பிரமணியனுக்கும், 'ஏன் கூடாது?' என்ற கடிதம் எழுதிய தாண்டூர் கே. வி. ருக்மணி அம்மாளுக்கும் ரூ. 12-8-0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.

# Stanes

## சிவப்பு லேபிள் கலப்பற்ற காப்பி

பிரசித்திபெற்ற ஸ்டேன்ஸ் கம்பெனியார்
தயாரிக்கும் ஓர் விலை குறைந்த ரகம்

1, 2, 3, 7, 14, 20 ராத்தல்
டின்களில் கிடைக்கும்




நற்செய்தி! ஸ்டேன்ஸ் கம்பெனியாரின் மனோகரமான சிவப்பு லேபிள் கலப்பற்ற காப்பி இப்பொழுது ஏராளமாக கிடைக்கிறது.

தாங்களே பொடி செய்ய விரும்புபவர்களுக்கு, மிகவும் ஜாக்கிரதையாக பொறுக்கி, வறுத்த ஸ்டேன்ஸ் காப்பிக் கொட்டைகளும் கிடைக்கின்றன.

**தருவிக்கும் செலவின்றி இவைகளை பிரத்தியேகமாக பெறுங்கள்**

சிறந்த ரக காப்பிக் கொட்டைகள், பீபெரி, தட்டை எக்ஸ்ட்ரா போல்டுகள் 10, 30 ராத்தல் பைகளில், விடுதிகளுக்கும் வியாபாரிகளுக்கும் தி. யுனைடெட் காப்பி சப்ளை கம்பெனி லிமிடெட், கோயம்புத்தூருக்கு எழுதுங்கள்.

தென் இந்தியாவின் சிறப்பு




சென்னைக்கு ஏஜண்டு:
**மெஸர்ஸ். வில்ஸன் பிரதர்ஸ்**
12 & 13 சைனாபஜார்

கும்பகோணத்திற்கு ஏஜண்டு:
**மிஸ்டர் எம். அளகப் பிள்ளை**
மெர்க்கன்டைல் ஏஜண்ட்
தபால் பெட்டி நெ. 5



ந்தியாவிலுள்ள உயர்தர 'பிலிம் டைரெக்டர்'களில் ஒருவராக எனது நண்பர் ராமகிருஷ்ணன் கருதப்படுகிறார். அவருக்கு இத் துறையில் பத்து வருஷங்களுக்கு மேல் அனுபவம் உண்டு. அவர் தமது வேலையை நன்கு உணர்ந்து திறமையுடன் முடிக்கக் கூடியவர். மிகப் பிரசித்தி பெற்ற நட்சத்திரங்கள் அவரது படங்களிலே நடித்திருக்கிறார்கள். பொதுவாக எல்லா ஸ்டுடியோக்களிலும் அவருக்கு நல்ல செல்வாக்கு. ஆனால் அவருக்கு ஒரே ஒரு குறையுண்டு. குறைந்தது அரை டஜன் நண்பர்களிடமாவது கலந்தாலோசித்த பின்னர் தான் அவருக்கு எந்தக் காரியத்திலும் இறங்கத் துணிவு ஏற்படும். என் அதிர்ஷ்டமோ துரதிர்ஷ்டமோ என்னவோ, அத்தகைய நண்பர்களில் நானும் ஒருவனாயிருந்ததால் மூன்று நான்கு நாட்களுக்கு ஒருமுறை எனது டெலிபோன் மணி அடிக்கும். அதில் ராமகிருஷ்ணனின் பரபரப்பான குரல் கேட்கும்:

"ஹல்லோ, ஹல்லோ ! நான்தான் — ராமகிருஷ்ணன் பேசுகிறேன்......."

"ஆம், ஆம்; தெரிகிறது. இந்த முறை என்னவாம் ?"

"சாயங்காலம் உங்களுக்கு ஓய்விருந்தால் என் இருப்பிடத்திற்குக் கொஞ்சம் வந்து விட்டுப் போங்கள்; உங்களிடம் ஒரு புது விஷயம் சொல்ல வேண்டும்."

அது புது விஷயமாக இல்லாவிட்டாலும் புதிய நட்சத்திரத்தின் 'முக வெட்டு' பற்றியோ, அல்லது குரல் இரவல் கொடுப்பவர்களின் குரல் பரீட்சையைப் பற்றியோ, அல்லது ஏதாவது சரித்திரப் படத்தில் தோன்றும் கதாநாயகியின் புது உடைகள் பற்றியோதான் ஆலோசனை கேட்கப்படும். இவ்விஷயங்களில் டாம், டிக், ஹெரி, அப்பாஸ், மோஹன், வசந்த், ஷாகடர் ஆகியவர்களின் அபிப்பிராயங்களைத் தெரிந்து கொண்டாலொழிய அவராகவே ஒரு முடிவான தீர்மானம் செய்ய முடியாது.

ஒரு வருஷத்துக்கு முன் நான் வழக்கமாக 'கடைசிப் பக்கம்' என்ற வரிசையில் எழுதி வரும் விஷயத்தைப் பூர்த்தி செய்ய முயன்று கொண்டிருந்தபொழுது டெலிபோன் மணி அடித்தது. ரிஸீவரைக் கையில் எடுத்ததும் பரிச்சயமான குரல் கேட்டது :

"ஹல்லோ, ஹல்லோ! நான்தான் ராமகிருஷ்ணன்......."

"சரி, என்ன விசேஷம் ?"

# பாத கமலம்

ஆசிரியர் : கே. ஏ. அப்பாஸ்
மொழி பெயர்ப்பு : கே. கணேஷ்

"இன்றைக்குச் சாயங்காலம் உங்களுக்கு ஓய்வு இருந்தால் இந்தப் பக்கம் கொஞ்சம் வந்துவிட்டுப் போங்கள். சில விஷயங்களைப் பற்றி உங்கள் யோசனையை நான் கேட்க வேண்டியிருக்கிறது. அதை நீங்கள் இங்கு வரும்பொழுது கூறுகிறேன். இரவுச் சாப்பாட்டை என்னுடன் வைத்துக் கொள்ளுங்களேன்."

அவ்வளவுதான்; டெலிபோன் தொடர்பு நின்றுவிட்டது. நானும் மாலை ராமகிருஷ்ணன் இருக்கைக்குப் போய்ச் சேர்ந்தேன். எதிர்பார்த்ததைப் போலவே நாஜூத், வசந்த், ஷாகூர் ஆகிய மும்மணிகளும் முன்னரே வந்திருந்து தேநீர் அருந்திக் கொண்டிருந்தனர். நான் அவர்களை விசேஷம் யாதோ எனக் கேட்டேன். ஷாகூர் மர்மமாக, "ராமுவையே கேளுங்கள். அவர் உடுத்திக் கொண்டிருக்கிறார்; இதோ வந்துவிடுவார்!" என்று பதில் கூறினார். ஆனால் ஷாகூரின் சன்னக் கோடு போட்ட சர்ஜ் கம்பளிச் சட்டை விசேஷத்தை வெளிப்படுத்தியது. இன்று மாலை எங்களுக்கு அளிக்கப்படும் வேலை எத்தகைய வேலையாக இருந்தாலும் சரி, நிச்சயமாகக் குறைந்தது ஒரு பெண்ணையாவது சம்பந்தப்பட்டதாக இருக்கும் என்பதை அது எடுத்துக் காட்டியது.

அதற்கேற்றாற்போல் ராமுவும் மக்காக உடுத்திக் கொண்டு வாசனைகளைத் தாராளமாகப் பூசிக்கொண்டு தோன்றினார். "யார் தலையில் கை வைக்கப் போகிறீர்கள்? யார் அந்த அப்பாவி?" என்றேன்.

மர்மமான அந்த விஷயமும் புரிந்து விட்டது. ராமுவின் புதுப் படத்திற்கு ஒரு நாட்டியக்காரி தேவையாக இருந்தது. பிரசித்தி பெற்ற சினிமா நாட்டியக்காரிகளைப் பெரும்பாலும் வேறு படங்களுக்கு எடுத்திருந்தார்கள். சிலர் பணம் அதிகமாகக் கேட்டனர். மற்றவர்கள் தடித்தோ மெலிந்தோ லாயக்கற்றவர்களாக இருந்தனர். இத்தகைய காரணங்களினால் ஒரு புதிய நாட்டியக்காரியைத் தேடிப் பிடிக்கும் திருப்பணிக்கு நாங்கள் புறப்பட்டோம். ஆப்பிரிக்கா வனாந்திரங்களில் வேட்டையாடச் செல்லும் கோஷ்டிகளை நீங்கள் திரைப் படங்களில் பார்த்திருப்பீர்கள். அவர்கள் தோளில் ஒரு பக்கம் ரைபிள் துப்பாக்கி, இடுப்பில் கட்டாரி, கழுத்தைச் சுற்றித் தூரதிருஷ்டிக் கண்ணாடி, தலையில் பெரிய தொப்பி, காலில் முழங்கால் வரை நீண்ட சப்பாத்து ஆகியவை சகிதம் ஆயத்தமாகச் செல்வதைக் கண்டிருப்பீர்கள். அதே முறையில்தான் பிலிம் ஆசாமிகளும் புது முகங்களைத் தேடும் வேட்டைக்குப் புறப்படுவார்கள். ஆனால் அவர்களுடைய உடை அலங்காரங்கள் மட்டும் வேறுவிதமாக இருக்கும். ரைபிள், கழல் துப்பாக்கிகளுக்குப் பதில் இவர்கள் ஷீபர் பேனாக்களையும் தங்க மூடி போட்ட பார்க்கர் பேனாக்களையும் தாங்கள் தேடிப் பிடிக்கும் நாட்டிய ஜோதிகள் தங்களுடைய ஒப்பந்தப்படி கையெழுத்திடுவதற்காக எடுத்துச் செல்வார்கள். துப்பாக்கிக் குண்டுக் காட்ரிஜுகளுக்குப் பதிலாகக் கையில் சிகரெட் டின்களையும் ரூபாய் நோட்டுகள் பிதுங்கும் மணிப்பர்ஸ்களையும் ஏந்திச் செல்வார்கள். மற்றபடி வேட்டைக் காலத்தில் ஏற்படும் ஆவல், விரட்டல், வேட்டையை மோப்பம் காணுதல் ஆகிய இத்யாதி உண்டு.

## 2

ஆப்பிரிக்கா பாலைவனத்திற்குச் சிங்க வேட்டையாடச் சென்றாலும் சரி, அல்லது பம்பாயிலுள்ள பாரஸ் ரோட்டிலிருக்கும் நாட்டியக்காரிகளைத் தேடிச் சென்றாலும் சரி,—அதற்கு ஒரு வழிகாட்டி வேண்டும். அவன் காட்டுப் பாதையின் நெளிவு சுழிவு, வேட்டைப் பொருள் தூரத்தில் வரும் பொழுதே அறியும் சக்தி, காட்டிலுள்ள ஒவ்வொரு ஜீவனின் பழக்க வழக்கங்கள் அனைத்தையும் அறிந்தவனாக இருக்க வேண்டும். பாரஸ் ரோடின் பக்கம் ராமகிருஷ்ணன் கார் போய்ச் சேர்ந்ததோ இல்லையோ, அத்தகைய ஒரு வழிகாட்டி காரின் புட்போர்டில் தோன்றினான். அவன் தொழிலை அவனது

தோற்றமே எடுத்துக் காட்டியது. "என்ன எஜமான், நீங்கள் 'குட்டி'களைப் பார்க்க வேண்டுமா? நான் நல்ல சரக்குகளை யெல்லாம் உங்களுக்குக் காட்டுகிறேன்" என்று கூறி, அவன் கண்ணடித்த முறையை அப்பாவி ராமு வெட்கத்துடன் நோக்கினார். அதற்குள் ஸ்டீரிங் சக்கரத்திலுள்ள பிடிப்புத் தளரவும் கார் விளக்குக் கம்பத்தை நெருங்கி விட்டது. ராமு பிரேக்கைப் பிடித்து நிறுத்தி எஞ்சினை நிறுத்திவிட்டார்.

"இதோ பார், ஒரு படத்திற்காக நாட்டியக்காரி ஒருத்தி தேவை. நல்ல நாட்டியக்காரியாக இருப்பதுடன் நல்ல முகவெட்டும் இருக்க வேண்டும்."

"அப்படியென்றால் என்னோடு வாருங்கள், எஜமான்! உங்களுக்கு வேண்டிய சரியான ஆசாமியைப் பிடித்துத் தருகிறேன். நாட்டியத்தில் சாதனா போசும் அருணியும் அவளிடம் பிச்சை வாங்க வேண்டும்......."

"அது சரி, ஆளின் தோற்றம் எப்படி?"

"அழகா, அவள் அப்சரஸல்லவா! பிரம்மாவின் அற்புத சிருஷ்டியல்லவா! அப்படியே வீணாவும் நசீமும் உருண்டு திரண்டு ஒன்றாகிய தோற்றத்தைப் போலிருப்பாள்!" என்றான் வழிகாட்டி.

எல்லாவற்றையும் ஒருவாறு பேசி முடித்த பிறகு இருளடைந்த மாடிப் படிகளின் மீது ஏறிப் பிரகாசமான ஓர் அறைக்குப் போய்ச் சேர்ந்தோம். எங்கள் வழிகாட்டி அப்சரஸ் என்றும் வீணாவும் நசீமும் சேர்ந்து திரண்ட உருவம் என்றும் புகழ்ந்த அந்தப் பெண் முப்பது வயது நிறைந்த முற்றிய விபசாரியாக இருந்தாள். ஏதோ சினிமா நடனங்கள் ஆடுவதாகப் பாவனை செய்தாள். அவள் பெயர் பிரேமலதாவோ பிரேம பாலாவோ என்னவோ எனக்கு இப்பொழுது சரியாக ஞாபகமில்லை. ஆனால் நான் இங்கே கூறப்போகும் கதை அந்தப் பிரேமலதாவைப் பற்றியோ, அல்லது பிரேம பாலாவைப் பற்றியோ, அல்லது வழிகாட்டி எங்களுக்குக் காட்டிய பொழுது குட்டை, நெட்டை, தடி, மெல்லி, கறுப்பு, சொன்னோமுஞ்சி—இப்படியாகக் காட்சியளித்த மற்ற ஆறு நாட்டியப் பெண்களைப் பற்றியோ அல்ல.

இத்தகைய ஓர் இடத்தில் ஹார்மோனியம்



வசித்தவன் எனது சொந்த ஊரிலுள்ள ஒரு 'காவாலி' என்பதை நான் அறிந்தேன். எங்கே அவன் எனது பெற்றோரிடமும் சுற்றத்தாரிடமும் இரவு நேரங்களில் நான் இப்படி சோர்ந்து சுற்றுகிறேன் என்று சொல்லிவிடுவானோ எனப் பயந்து, வந்த வழியே மெதுவாய் நழுவிய செய்தியை இங்கே கூறுவது உங்களுக்கு அவ்வளவு ரஸமாயிருக்காது என்று நான் எண்ணுகிறேன். நாங்கள் சென்ற ஒவ்வொரு இடத்திலும் தாம்பூலத்திற்காகப் பெண்களுக்குத் தட்சிணை அளித்த தொகையையும், அதைக் கண்டு நான் இந்தக் கணக்குகளை யெல்லாம் ஸ்டுடியோக் கணக்கன் எந்த இனத்தில் எழுதுவானோ என்று மலைத்ததையும் தெரிந்துகொள்ள உங்களுக்கு அக்கறை இருக்காது என்றே நினைக்கிறேன்.

விஷயத்தைச் சுருக்கமாகச் சொல்லி விடுகிறேனே! அன்று நடு இரவு ஆகியும் படத்திற்கு லாயக்கான ஓர் உருவத்தையும் காணக் கூடாமற் போகவே, நாங்கள் அந்த வழிகாட்டியிடம் இனிமேல் எத்தகைய அப்சரஸ்களையோ, தேவ கன்னிகைகளையோ, மாதுரியும் சுலோசனாவும் ஒன்றாய்த் திரண்டு காட்சி யளிப்பவர்களையோ, இன்றேல் நர்கிஸும், சுரய்யாவும் சேர்ந்து ஒருருவாய் விளங்குபவர்களையோ காணத் தயாராக இல்லை என்று பட்டவர்த்தனமாகக் கூறிவிட்டோம். ஆனால் அவனோ விடாக் கண்டனாக இருந்தான். எதற்கும் அவன் அசைவதாகத் தெரியவில்லை. சலியாத உற்சாகத்துடன், "தயவு செய்து என்னுடன் இன்னும் ஓர் இடத்திற்கு மட்டும் நீங்கள் வாருங்கள். அதுவும் உங்களுக்குப் பிடித்தமாக இல்லை என்று தோன்றினால் என் தோலைச் செருப்பாய்த் தைத்துப் போட்டுக் கொள்ளுங்கள். ஆனால் நாம் இப்போது கெண்ணடிப் பாலத்திற்குப் போக வேண்டும்" என்றான்.

வசந்திற்குப் பசியாயிருந்ததால் இனித் தேடுவதில் பிரயோசனமில்லை எனத் தோன்றியது. ஆனால் ராமகிருஷ்ணனோ ஸ்டுடியோவில் செட்டிங் எல்லாம் தயார்செய்து வைத்திருந்தார். 'டான்ஸ் ஸீன்' ஒன்றுதான் பாக்கி. படம் எற்கெனவே மிகவும் தாமதித்துவிட்டது. ஷாகூரும் தாஜூதும் விடியும்

வரையோ அல்லது ராமகிருஷ்ண னின் வெற்றிலைத் தட்சிணையில் கைப் பணம் தீரும் வரையோ சுற்றத் தயாராக இருந்தார்கள்.



"சரி, எப்படியோ இதை மட்டும் பார்ப்போம். ஆனால் கண்டிப்பாய் இதுதான் கடைசி. அப்புறம் வீடு போய்ச் சேர வேண்டியதுதான்!" என்று வழக்கம் போல் நானும் சம்மதித்தேன். நாங்கள் ஏறிச்சென்ற கார் வெய்ஸ்டன் ரோடு வழியாகச் சென்றது. கடைசியில் திரும்பி இருண்ட ஒரு சந்தில் ஏறக்குறையக் கென்னடி பாலத்திற்குக் கீழே நின்றது.

நாங்கள் அதுவரை சென்று வந்த பாஸ் ரோடின் நாற்றம் பிடித்த பொந்துக்களைவிடச் சுத்தமாக ஒரு ஐந்தடுக்குக் கட்டடம் நின்றது. பாட்டின் ஒலியும் கால் சதங்கையின் ஓசையும் காதில் விழுந்தன. வெள்ளைச் சிப்பாய்கள் ஒகிருவர் மேலுங் கீழுமாய்ப் போய்க் கொண்டிருந்தார்கள். எதிர்த்தாற் போலிருந்த ஹோட்டலிலிருந்து ஒரு பையன் அரை டஜன் சோடாப் புட்டிகளைத் தூக்கிக் கொண்டு விரைவாய் வந்து கொண்டிருந்தான். வெளிச்சமான ஓர் அறையில் ஒரு பெண் பெருஞ் சத்தத்துடன் சிரித்துக் கொண்டிருந்தாள். அந்தச் சிரிப்பைத் துளைத்துக்கொண்டு இரவில் காயம் பட்ட பூனை வீறிடுவது போல் ஒரு கூச்சல். பின்னர் பாலத்திற்கடியில் மின்சார ரயில் இடியோசைபோல் ஓடவும் அதன் ஓசை அந்தச் சிரிப்பையும் கூச்சலையும் அடக்கி விட்டது. வண்டி சென்றதும் பழைய பாட்டொலியும் கால் சதங்கை ஓசையும் காதில் விழுந்தன. கீச்சிட்ட குரலில் பிரசித்தமான பாட்டான 'ஹமாரி கலி ஆனா!'—அதாவது, 'அன்பே, எங்கள் சந்திற்கு வாருங்கள்!' என்று யாரோ பாடினார்கள். நாங்களும் படியில் மலைமேல் ஏறுவது போல் ஏறிக் கொண்டிருந்தோம்.

எங்களுக்கு நல்வரவு கூறுவதுபோல் கதவு திறந்திருந்தது. எப்பொழுதோ ஒரு காலத்தில் வெண்மையாக இருந்த வெள்ளை விரிப்பு ஒன்று தரையில் விரிக்கப்பட்டிருந்தது. சுவர் ஓரத்தில் பெருந் திண்டுகள் வைக்கப்பட்டிருந்தன. அந்த அறை காலியாக இருந்தது. அது நிர்வாணமாக இருப்பது போல் எனக்குத் தோன்றியது. அறையின் ஒரு மூலையில் ஹார்மோனியம் ஒன்று கிடந்தது. மற்றொரு மூலையில் ஒரு ஜோடி தப்லாக்கள் இருந்தன. எங்கள் வழிகாட்டி அவ்வீட்டிற்கு மிகவும் பழக்கமானவர் போல் அழுக்குத் திரையை விலக்கி அப்பாலிருந்த அறைக்குள் சென்றான். கொஞ்ச நேரத்தில் வாயில் வெற்றிலையை மென்று கொண்டே அவன் திரும்பி வந்து, "அவள் வெளியே சென்றிருக்கிறாள்; சில நிமிஷங்கள் நாம் காத்திருக்கவேண்டும்" என்றான்.

வெள்ளைத் தாடியில் மருதாணிச் சாயம் பூசிக் கொண்டிருந்த கிழ வேலைக்காரன் ஒருவன் தட்டில் வெற்றிலை தொணர்ந்து எங்கள் முன் வைத்தான். அவனது கண்களில் ஒரு விசித்திரச் சோகம் இருந்தது. தட்டை வைத்துவிட்டு வந்த வேகத்திலேயே அவன் விரைவாகத் திரும்பிவிட்டான்.

"வேடிக்கையான இடம்!" என்றார் டாகூர்.

"ஆமாம்; இந்த அழுக்குத் திரைக்குப் பின்னால் ஏதோ மர்மம் இருப்பதுபோல் தோன்றுகிறது!" என்றேன் நான்.

"சோக நாடகமாக இருக்குமோ?"

"காஸ்லேட், ஜேன் அயர் முதலிய அழுமூஞ்சிப் படங்களைப் பார்த்த உனக்கு எல்லாம் சோகக் கதைகளாகத்தான் தோன்றும்" என்றார் ராமு.

வசந்த் தனது கைக் கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டே, "இப்பொழுது மணி பன்னிரண்டரை யாகிவிட்டது. நாம் புறப்படுவோம். இரவு முழுவதும் நம்மால் காத்திருக்க முடியுமா?" என்று கூறினார்.

நான் சரி என்று ஆமோதிப்பதற்குள் அழுக்குத் திரைக்குப் பின்னாலிருந்து வெளுத்த வேஷ்டியும் சட்டையும் அணிந்த ஒரு மனிதன் தோன்றினான். அவன் தோன்றியதும் அறையில் நிலவிய அமைதி குலைந்தது. அவன் தோற்றத்தில் ஒன்றும் விசேஷமில்லை. அவன் நடுத்தர உயரமாய், கறுப்பாய் இருந்தான். விசித்திரம் என்னவென்றால் அவன் பேசிய முறையேயாகும்.

“ஆதாப் அர்ஸ்; நமஸ்தே; பந்தகி. தயவு செய்து அமருங்கள். உங்களைப் போன்ற கனவான்களை எளியவனாகிய நான் எப்படி உபசரிப்பது? என்ன சாப்பிடுகிறீர்கள்? விஸ்கியா, பிராந்தியா அல்லது ஜின்னா? இல்லாவிடில் பீர் சாப்பிடுகிறீர்களா? ஓ, நீங்கள் ஒருவரும் குடிப்பதில்லையோ! பரவாயில்லை. ஏதேனும் சூடாக வேணுமா? அல்லது குளிர்ச்சியாய்ச் சாப்பிடுகிறீர்களா? டீ வேண்டுமா? அல்லது கலரா?—ஆமாம், உஷ்ணமாகத் தான் இருக்கிறது; ஜில்லென்ற கலர் தான் நல்லது. அடேய் மிஸ்ரா......!”

அடுத்த நிமிஷம் தூக்கம் நிறைந்த கண் படைத்த கிழவன் தோன்றினான். “இந்த கிளாஸில் நிறைய ஐஸ் போட்டுக் கலர் வாங்கிக் கொண்டு வா!” என்று கட்டளை விட்ட பின்னர், எங்களிடம் அவன் தன் போக்கிலே பேசத் தொடங்கினான். “நீங்கள் சந்திரா ஆடுவதைப் பார்க்க வந்தீர்களாக்கும்! அவன் இப்பொழுதுதான் போலீஸ் கிளப்பிலிருந்து திரும்பி வந்திருக்கிறான். போலீஸ் கமிஷனர் துரையே அவனைப் பாராட்டி மாலை சூட்டினார். முழுசாய் மூன்று மணி நேரம் அவன் ஆட நேர்ந்தது. கடைசியில் நான் மிகவும் சிரமப்பட்டு அவனை அழைத்து வரவேண்டியிருந்தது. அவனை வேலில் விடுவோம் என்கிறீர்களா? எல்லோரும் அவன் காட்டியதைப் பார்த்துச் சொக்கிப் போய் விட்டார்கள். சென்ற வாரம் அவன் ரேடியோ கிளப்பில் ஆடியபொழுது ஒரு அமெரிக்கன் டைரெக்டர்—நேரே ‘ஹாலிவுட்’டில் இருந்து வந்தவர்—அவனைக் கண்டதும் ஒப்பந்தம் செய்து கொள்ள முயன்றார். எல்லாம் இந்தக் கப்பல் தகராறுதான்! இல்லாவிட்டால் சந்திரா இப்பொழுது ‘ஹாலிவுட்’டில் இருப்பான். இதை வீணாக நான் கூறி உங்களைத் தொந்தரவு செய்கிறேனே! இந்தச் செய்தியெல்லாம் பத்திரிகைகளில் வெளி வந்ததுதானே! நீங்கள் படித்திருப்பீர்கள் அல்லவா?”

நான் பத்திரிகை ஆசாமி என்று தெரிந்து கொண்டுதானோ என்னவோ, இந்தக் கேள்வியை அவன் என்னை நோக்கிக் கேட்டான். “ஆமாம், எல்லாப் பத்திரிகைகளிலும் வெளி வந்திருந்தது” என்று நான் புளுகினேன்.

அப்பொழுது ஒரு கொழுத்த சேட் குடி மயக்கத்துடன் இரண்டு தோழர்கள் சகிதம் வந்து சேர்ந்தான். தன் விரலால் திரையைச் சுட்டி, “சந்திரா இங்குதான் வசிக்கிறானா?” என்று அவன் கேட்டான். நாங்கள் “ஆமாம்” என்றோம்.

உடனே அந்த மனிதன் எங்களை விட்டு விட்டுக் கிளம்பி விட்டான். “வாருங்கோ, சேட் சாகிப்! நமஸ்தே; பந்தகி. உங்களைப் போன்றவர்கள் வருகைக்குச் சந்திரா பாக்கியம் செய்திருக்கவேண்டும். இதோ ஒரு நிமிஷத்தில் வந்து விடுவான். அரசாங்க மாளிகையில் அவனை ஆடுவதற்கு அழைத்திருந்தார்கள். அங்கு போய்விட்டு இப்பொழுது தான் அவன் திரும்பி வந்தான். அதிகாரிகளின் அழைப்பை நாம் நிராகரிக்க முடியுமா? அங்கே கவர்னர் துரையே தம் கைப்பட அவனுக்கு மாலை சூட்டினார்......” என்று அவன் அங்கே அளந்து கொண்டிருந்தான். அவன் பேசும் முறை எங்களைத் திகைக்க வைத்தது. நாஜுக், என் காதில் மெதுவாக “இதோ பார், அடுத்தாற்போல் எவனாவது வந்தால் சக்கரவர்த்தியே சந்திராவுக்கு மாலையிட்டார் என்பான் அவன்!” என்றார்.

அதே சமயத்தில் திரை ஒரு புறம் விலகியது. மெல்லிய முறுக்கு மீசை படைத்த உயரமான ஒரு மனிதனைத் தொடர்ந்து சந்திரா வந்தான். (தொடரும்)



# கணவரின் கண்ணீர்

கிளஜா

(சென்ற வாரத் தொடர்ச்சி)

4

விழுந்தவள் பிரமை தெளிந்து எழுந்த போது என் கணவர் அங்கு இல்லை. என் உள்ளக் கொதிப்பை அடக்க முடியாமல் வாய்விட்டுக் கதறினேன். ஆற்றுவாரும் தேற்றுவாரும் இன்றி நெடுநேரம் கதறிக் கொண்டிருந்தேன். அன்றைய இரவு கழிந்து பொழுது விடிந்தும் அவர் வரவில்லை.

வேலைக்காரியின் எச்சரிப்பு, 'இனி அந்த வீட்டில் எனக்கு இடமில்லை' என்பதைக் குத்திக் காட்டியது. ஏதோ ஒரு தைரியத்தில் எழுந்தேன். என் உடம்பில் உள்ள சகல வைர ஆபரணங்களையும் கழற்றிப் பீரோவில் வைத்துப் பூட்டிச் சாவியை அவர் பார்க்குமிடத்தில் வைத்தேன். என் தாயார் எனக்குச் சீதனமாக அளித்த சிவப்புத் தோட்டையும், இடையில் ஒரு நூல் சேலையையும் அணிந்து கொண்டு கிளம்பினேன். அதே சமயம் உள்ளே நுழைந்த என் கணவர் அவருடைய அறைக்குள் சென்றார். என் மனதைத் திடம் செய்து கொண்டு நான் அவருடைய அறைக்குள் நுழைந்தேன். "நான் போகிறேன்; கடவுள் இருப்பது உண்மையானால், அவர் நான் குற்றமற்றவள் என்பதை ஒரு காலத்தில் நீங்கள் உணரும்படி செய்வார்" என்று சொல்லிக் கொண்டே அவருடைய பாதங்களில் என் சிரம்பட வணங்கினேன். வணங்கியவள் முகத்தை எடுப்பதற்குள் அவர் என்னை எட்டி உதைத்தார். பல்லை நறநற வென்று கடித்தபடி, "கொலை பாதகிக்குக் கடவுள் வேறு? தொலைந்து போ! நீ செத்தாலும் நான் தலை முழுக மாட்டேன்!" என்று இரைந்தார்.

என் முகத்தில் விழுந்த உதையும் உள்ளத்தில் விழுந்த உதையும் ஒன்று சேர்ந்து, 'விண்' 'விண்' என்று வலி தெறிக்க, எப்படியோ என் உடலையும் வயிற்றையும் சுமந்து கொண்டு வந்து வண்டியேறினேன். ஸ்டேஷனை அடைந்து ரயிலேறியபின் டிக்கெட்டை என்முன் போட்ட வேலைக்காரன் பிறகு அங்கு நிற்கவோ, சொல்லிக் கொள்ளவோ இஷ்டமில்லாதவன் போல் வேகமாகப் போய்விட்டான்.

தஞ்சாவூர் ஸ்டேஷனை அடைந்த பிறகு தான் வண்டி வாடகைக்குக் கையிலே காசில்லை என்பதை உணர்ந்தேன். ஸ்டேஷனிலிருந்து எங்கள் கிராமத்துக்குப் போக நான்கு மைல் நடந்தாக வேண்டும். வேறு வழி?

பதின்மூன்று மாதங்களுக்கு முன் பணக்காரியாகச் சென்ற மகள், இன்று பரதேசியாகத் திரும்பி வந்து தன் மடியில் விழுவாள் என்பதைச் சற்றும் எதிர்பாராத என் தாயார் பதறித் தவித்தாள். விஷயம் முழுவதையும் மிகவும் பொறுமையுடன் கேட்டு, "அடி பெண்ணே! அந்தக் குழந்தை தண்ணீரில் மூழ்கிச் சாகும்வரை நீ என்னடி செய்து கொண்டிருந்தாய்?" என்றாள்.

என் உள்ளம் வெடித்தே விடும்போலக் குமுறியது. "ஐயோ! அம்மா! நீயுமா என்னைக் 'கொலைகாரி' என்று எண்ணுகிறாய்?" என்று கேட்டுக் 'கோ' வென்று கதறி விட்டேன். கதறிய என்னைத் தாங்கி மார்போடு அணைத்துக் கொண்ட அம்மா பிறகு எதுவுமே என்னைக் கேட்கவில்லை. அவள் அணைப்பில் என் உள்ளத்தின் வெப்பம் சற்றே தணிந்தது.

விஷயம் வேகமாகவும் பல விபரீதங்களுடனும் வெளியில் பரவியது. பலர் பல விதமாக எங்களைப் பரிகசித்தனர். பணக்கட்டோ அன்றி மனிதக்கட்டோ இல்லாத பரதேசிகளான நாங்கள் அவர்களுடைய பரிகாசத்திற்குத் தலை வணங்கிச் செல்வதைத் தவிர வேறு வழியில்லை. 'இம்மாதிரி வாழ்வதைவிடச் சாவது மேல்' என்று நான் அடிக்கடி எண்ணுவேன். 'செத்தாலும் அபவாதம் அதிகரிக்குமே தவிரக் குறையாது; சாகாமல் இருந்தாலும் ஒருகால் உலகம் உண்மையை உணரும்படி செய்ய ஒரு சந்தர்ப்பம் நேரலாம்' என்ற எண்ணமும் பின்னோடு ஓடிவரும். 'மான அவமானம்' என்ற உணர்ச்சிகளை உதறித் தள்ளிவிட்டு, என் தாயார் ஊரில் ஒவ்வொரு வீடாகப் படியேறி வேலை செய்யத் தொடங்கினாள். எங்கள் இருவருடைய வயிற்றைக் கழுவ எவ்வளவோ சாதனங்கள் வேண்டியிருந்தது. அதுவும் அப்போது என் வயிற்றில் இன்னொரு உயிரும் ஊசலாடிக் கொண்டிருந்தது. இன்னும் சில தினங்களில் இருண்ட என் வாழ்வில் சிறு



ஒளியொன்று தோன்ற இருந்தது. இந்த எண்ணமே எங்கள் வாழ்வின் ஜீவநாடியாக இருந்தது.

## 5

அப்பப்பா! அன்று ஆரம்பித்த அந்தப் பிரசவ வேதனைதான் எவ்வளவு கடினமானது! இருந்தாலும் அது எனக்கு இன்ப வேதனையாகவே யிருந்தது. என் வயிற்றில் புரண்டு வந்த அந்தச் சின்னஞ் சிறிய உருவம், தான் வெளிவர வேண்டிய வேளையை உணர்ந்து எவ்வளவு விரைவாக முயற்சியில் இறங்கியது! பக்கவாட்டில் திரும்பி வந்து கொண்டிருந்த சிசு சட்டென்று முயற்சியை நிறுத்தி ஓய்ந்து நின்றுவிட்டது! மருத்துவ அம்மாளும் தன்னால் முடிந்தவரை சிசுவை வெளிக் கொண்டுவரப் பிரயத்தனப் பட்டாள். அது பலிக்காமற் போகவே, "இந்தக் கேஸை இனிப் பெரிய ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனால்தான் பெரிய உயிரைக் காப்பாற்றலாம். குழந்தையின் கால் விரல் தாயின் விலாப் பக்கமுள்ள எலும்பில் சிக்கியிருக்க வேண்டும்; ஆயுத உதவி கொண்டுதான் சிசுவை வெளிக் கொண்டுவர முடியும். இனித் தாமதிக்கும் ஒவ்வொரு நிமிஷமும் மிக்க அபாயகரமானது!" என்று சொல்லி விட்டாள்.

என் தாயாரின் முகத்தில் 'ஈ'யாடவில்லை. பாவம், அவள் பணத்திற்கு எங்கே போவாள்? கைகளைப் பிசைந்த வண்ணம் அங்கும் இங்கும் ஓடினாள். எப்படியோ முயற்சிசெய்து தக்க ஏற்பாடுகளுடன் என்னைப் பெரிய ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்றாள்.

ஆஸ்பத்திரியை அடையும்பொழுதே என்னுடைய நிலைமை ரொம்ப மோசமாகி விட்டது. கட்டிலில் கிடத்தி என்னைப் பிரசவ அறைக்கு எடுத்துச் செல்லும் பொழுது என் தாயார் வாய்விட்டுக் கதறிவிட்டாள். அவளது பரிதாபமான தோற்றம் என்னுடைய நெஞ்சைக் கலக்கியது. என்னால் அவளுக்கு எத்தனை துன்பம்! இந்த ஜன்மத்தில் இல்லாவிட்டாலும் சென்ற ஜன்மத்தில் நான் ஒரு 'கொலைகாரி' யாகவே

இருந்திருப்பேன். இல்லாவிட்டால் எனக்கு மட்டும் இத்தனை இக்கட்டுகள் வருவானேன்? இதை எண்ணியதும் கண்கள் இருண்டு மயக்கமாக வந்தது. மங்கிக் கொண்டே வந்த என்னுடைய நினைவில் தோன்றிய என் கணவர், 'கொலைகாரி! வேண்டும் உனக்கு இந்தத் தண்டனை!' என்றார் பல்லைக் கடித்தபடி. அவ்வளவுதான்; நாலாபுறமிருந்தும், 'கொலைகாரி!' 'கொலைகாரி!!' என்ற பயங்கரமான சத்தம் எழுந்து என் செவிகளில் மோதி எதிரொலி செய்யவே என்னுடைய நினைவு அடியோடு மங்கிவிட்டது. பிறகு நடந்தவொன்றும் நான் அறியேன்.

மங்கிய என்னுடைய நினைவு ஒளி பெறும் போது உடம்பு முழுவதும் ஒரே வலியாக இருந்தது. பாரமாக இருந்த உடம்பு லேசாகி யிருந்தும் வலியால் அசைக்க முடியவில்லை. பிரயாசைப்பட்டு மெதுவாகக் கண்ணிமைகளைத் திறந்தேன். எதிரில் புன்முறுவலுடன் நின்றுகொண்டிருந்த லேடி டாக்டர், தன் கைகளை என் முகத்திற்கு அருகில் தாழ்த்தி. "இதோ பார்! உன் குழந்தை!" என்று காட்டினாள். 'பட்டுப் போன்ற மிருதுவான சிவந்த தேகம்; ரோஜா மலரைப் போல் சிவந்த சின்னஞ் சிறிய கைகால்கள்; கறுப்பு வெல்வெட்டைப் போல் கவிந்திருந்த சுருண்ட மயிர்கள்; ஆஹா! எவ்வளவு அழகான குழந்தை!' என்று எண்ணியபடி கண்களை இமைக்காமலே பார்த்துக் கொண்டிருந்தேன். குழந்தை தன் கருவண்டையொத்த கண்களைத் திறந்து. உடலை நெளித்து 'குவா' 'குவா' என்று அழ ஆரம்பித்தபோது, என் உடலில் உள்ள அத்தனை வலிகளையும் மறந்து நான் ஆனந்த மடைந்தேன்.

எப்படியோ கடன் உடன் வாங்கி ஆஸ்பத்திரிக்குச் செலுத்த வேண்டிய பணத்தைச் செலுத்திவிட்டு என்னை வீட்டிற்கு அழைத்து வந்தாள் என் தாயார். பிறந்த குழந்தை ஒரு பெண் சுமையாக இல்லாமல் பிள்ளையாகப் பிறந்ததில் அம்மாவுக்குச் சற்று ஆறுதல். குழந்தை பிறந்ததை அறிவித்து என் கணவருக்கு அவள் ஒரு தந்தி கொடுத்தாளாம். என் அபாயகரமான நிலைமையை அறிந்தால் நிச்சயமாக ஏதாவது பண ஒத்தாசை செய்வார் என்று நம்பியே அவ்விதம் செய்தாளாம். என்ன அறிவீனம்! பாவம், அவள் எதிர்பார்த்தபடி உதவி எதுவும் கிடைக்கவில்லை. ஏற்கனவே இருந்த கஷ்டத்துடன் என் குழந்தையின் கஷ்டமும் சேர்ந்துவிடவே, அவள் பாவம், ஓடி ஓடி வேலை செய்ய வேண்டியதாயிற்று. நானும் வீட்டிற்குள் இருந்தபடியே உளுந்து உடைத்துத் தருவது, புளியிலிருந்து கொட்டை எடுத்துத் தருவது, பாட்டு, படிப்பு சொல்லிக் கொடுப்பது—இம்மாதிரி சில்லறை வேலைகள் கிடைத்தபொழுது செய்து பொருள் தேடினேன். இப்படியே வருஷம் ஒன்று ஊர்ந்து சென்றது.

திடீரென்று ஒருநாள் என் தாயார் பக்க பாரிசத்தால் பீடிக்கப்பட்டுப் படுக்கையில் விழுந்தாள். விழுந்த நாள் முதல் அவள் உள்ளத்தை, 'பரதேசியான ஒரு பெண்; அவளுக்குப் பாரமாக ஒரு குழந்தை; இந்தப் பயங்கரமான உலகில் தாயின் துணையுமின்றி இனி அவள் எப்படிக் காலம் கழிப்பாள்?' என்ற ஏக்கமே அரித்து வந்தது. அதுவே அவளை விரைவில் மரணவாயிலுக்கு இழுத்துச் சென்றது.

நேற்று மாலை இருந்த என் அம்மாவின் சடலங்கூட இன்று இல்லை. 'அம்மா! அம்மா!' என்று அலறினேன். வம்புலாஞ் சோலை சுடுகாட்டில் வெந்து சாம்பலாகிக் கொண்டிருக்கும் என் அருமை அம்மா இனி எப்படி வருவாள்? எனக்குத் துணை இனி மேல் தூளியில் துயிலும் அந்தச் சின்னஞ் சிறு பாலகனே!

## 6

இதுவரை பின்னோக்கிச் சுழன்று கொண்டு வந்த என் நினைவுச் சக்கரம் இதற்கு மேல் முன்னோக்கிச் சுழலத் தொடங்கியது:—

'காலம் வெகு விரைவில் ஓடி விடுகிறது. பாலகனாக இருந்த என் செல்வன் மடமட வென்று வளர்ந்து பால்யனாக மாறுகிறான். அவனுடைய அன்பில் நான் பட்ட கஷ்டங்களை யெல்லாம் மறந்து ஆனந்த சாகரத்தில் மூழ்கி நிற்கும்போது அவன்—என் குமாரன்—கேட்கிறான்.

'அம்மா! இனியாவது என் தகப்பனாரைப் பற்றிய விஷயத்தைச் சொல்ல மாட்டாயா?'

'என்னால் எதையும் மறைக்க முடியவில்லை. எல்லா விஷயத்தையும் ஒன்று விடாமல் சொல்லிவிடுகிறேன். சாந்தமே உருவான அவன் விஷயத்தைக் கேட்டதும் கோபமே உருவாக மாறிவிடுகிறான். 'அடி, பாவி! நிச்சயமாக நீ கொலைகாரிதான்!' என்று அவன் வாயிலிருந்து தெறித்த கடுஞ் சொல், பேரிடி யெல்லாம் ஒன்று சேர்ந்து ஓரிடியாகி என் தலையில் விழுகிறமாதிரி

இருக்கிறது' அப்பப்பா! இதற்குமேல் என் சிந்தனைச் சக்கரம் சுழல மறுத்துவிட்டது. எதிர் காலத்தில் என் அருமைப் பிள்ளையின் வாயிலிருந்தே இந்தச் சொல்லைக் கேட்பதற்கு முன் செத்து மடிவதே மேல். 'ஏ, எமதர்மனே! இப்பொழுதே என் உயிரையும் எடுத்துக்கொண்டு விடு!' என்று சொல்லிக்கொண்டே திறந்த கண்களை மறுபடியும் மூடிக்கொண்டேன்.

'ஆ! இதுவென்ன! எமலோகத்தில் பரிமளாவின் குரல்!

'சித்தி! சித்தி!' என்று யாரோ என் தோள்களைப் பிடித்து உலுக்கவே திடுக்கிட்டு விழித்தேன். கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தேன். மீண்டும் மீண்டும் கசக்கிக்கொண்டு பார்த்தேன். என்ன ஆச்சரியம்! என் கண்மணி பரிமளா என் கண் முன்னால் நின்றுகொண்டிருந்தாள்! துளித் துணியைக் கைகளால் விலக்கிக் கொண்டு, 'களுக்'கென்று சிரித்த குழந்தையின் குரல் நான் காண்பது கனவல்ல என்பதை நிரூபித்தது. எழுந்து இரு கரங்களாலும் பரிமளாவை வாரியெடுத்து அணைத்துக் கொண்டேன். என் கண்களிலிருந்து பொங்கி வழிந்த கண்ணீர் அவள் நிலை முழுவதையும் நனைத்து விட்டது. கண்ணீரைத் துடைத்துக் கொண்டு நான் நிமிர்ந்த பொழுது கையில் குழந்தையுடன், 'களுக்' கென்று சிரிக்கும் அதன் சிரிப்பில் மயங்கி நின்று கொண்டிருக்கும் என் கணவரைக் கண்டு திடுக்கிட்டேன். மீண்டும் 'நான் காண்பது கனவு அல்ல!' என்பதை உறுதிப் படுத்திக் கொண்டேன். பரிமளா தன் காவிரி யாத்திரையைப் பற்றிச் சொன்ன வரலாறு இதுதான் :—

"நான். சிந்தனையில் மூழ்கியிருக்கும் போது பரிமளா ஓர் ஆட்டுக் குட்டியைத் துரத்திக் கொண்டே, ஆற்றின் கரையோடு வெகுதூரம் சென்றுவிட்டாள். சென்றவள் திகைத்து நிற்கும்படியான தொரு சம்பவம் அப்பொழுது அங்கே நடந்து கொண்டிருந்தது. பரிமளாவை யொத்த பல சிறு பெண்கள் கொம்மாளமடித்துக் கொண்டு ஒரு படகில் ஏற ஆரம்பித்தனர். அவர்கள் படகில் ஏறுவதை நின்று மேல் பார்த்து வந்த ஒருவர் பரிமளாவைப் பார்த்து, 'என்ன பாப்பா! நீயும் ஏறிக் கொள்ளுகிறாயா?' என்று கேட்டுக் கொண்டே, பரிமளாவின் கையைப் பிடித்துப் படகில் ஏற்றி விட்டார். மற்றப் பெண்களின் கொம்மாளத்தில் தன்னையும், என்னையும் மறந்து விட்டாள் பரிமளா. படகு நகரத் தொடங்

யேதும் அவளும் மற்றவர்களோடு சேர்ந்து கொண்டு தண்ணீரைக் கையால் வாரி இறைத்தபடி ஆனந்தமாகப் படகில் செல்லத் தொடங்கினள். சிறிது நேரத்துக் கெல்லாம் படகு எதிர்க் கரையில் நின்றது. கீழே இறங்கிய மற்றப் பெண்கள் பரிமளாவைக் கையைப் பற்றி இழுத்துக் கொண்டுபோய் அக்கரையிலிருந்த ஸ்டேஷனை யடைந்து அங்கு நின்ற வண்டியிலும் ஏற்றிவிட்டனர். வண்டி நகரத் தொடங்கிய பிறகே பரிமளா திடுக்கிட்டு விழித்தாள். கலவரம் தெளிந்து அவள், 'சித்தி!' என்று அழ ஆரம்பித்த பொழுது; வண்டி ஹரித்திராநதி ஸ்டேஷனையும் தாண்டியிருக்க வேண்டும். பெண் குழந்தைகளை மேல் பார்த்து வந்த அந்த மனிதர் அழுத பரிமளாவைத் தம் பக்கத்தில் அமர்த்திக் கொண்டு, சிறிது நேரத்தில் திரும்பவும் சித்தியிடத்தில் கூட்டிப் போய் விட்டுவிடுவதாகச் சமாதானம் சொன்னார். இந்தச் சமாதானத்தையே அவர் நெடுகிலும் சொல்லி வந்தார்.

பரிமளாவைப் படகேற்றி அழைத்துச் சென்றவர் ஒரு சர்க்கஸ் கம்பெனி முதலாளி. அவர் பரிமளாவிற்குப் பல சமாதானங்கள் சொல்லிக் கொண்டே, அவளைக் கம்பெனிக் குழந்தைகளுடன் சேர்த்துப் பலவிதமான



கணவன் :— சும்மாச் சும்மா புடவை, புடவை என்று உசிரை வாங்கறயே...... ஒரு நாள் உன் நோக்கு போறுக்காமல் தற்கொலை பண்ணிக்கப் போறேன்......ஆமாம்!

மனைவி:—சொன்ன சொல்லை நிறைவேற்றுகிற வழக்கந்தான் உங்களுக்கு எப்போதும் கிடையாதே!

விளையாட்டுக்களைக் கற்றுக் கொடுத்துக் கொட்டகையில் ஆடும் அளவு பழக்கியும் விட்டார். அவர் இருந்தவரை பரிமளாவை மிக்க ஆதரவோடு நடத்தி வந்தார். பிறகு கம்பெனி வேறொரு முதலாளியின் கைக்கு மாறியபொழுது பரிமளாவும் மற்றப் பெண்களுடன் கொடுமையாக நடத்தப்பட்டாள். பல இடங்களைச் சுற்றிய கம்பெனி கடைசியாக மன்னார்குடியை அடைந்து, 'டேரா' போட்டது. பரிமளாவின் தந்தைக்குத் தெரிந்த நண்பரொருவர் கொட்டகையில் ஆடிய பெண் குழந்தைகளில் பரிமளாவைக் கண்டு கொண்டார். விஷயத்தை உடனே பரிமளாவின் தந்தைக்கு அறிவித்து, அவரையும் அழைத்து வந்து காட்டினர். பிறகு பல இடையூறுகளையும் கடந்து பரிமளாவை அழைத்து வந்தார். உண்மையில் ஆற்றில் மூழ்கி இறந்தவள் யாரோ ஒரு பெண்!''

இதுவே பரிமளா சொன்னவைகளிலிருந்து நான் தெரிந்து கொண்ட விஷயங்கள். இதை யறிந்ததும் என் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு பரபரப்புடன் எழுந்து நான் சமையல் வேலையில் ஈடுபட்டேன்; பரிமளாவுக்கும் அவள் தந்தைக்கும் பரிமாறினேன்.

அன்று மாலை, ''சித்தி! இன்று இரவு வண்டிக்கே புறப்படலாமா என்று அப்பா உன்னைக் கேட்கச் சொன்னான்!'' என்று சொல்லிக் கொண்டே பரிமளா ஓடி வந்தாள். அவளை அணைத்துக் கொண்டு, ''என்றேனும் ஒரு நாளாவது இருப்பாய் என்று நினைத்தேன்; சரி, உன் அப்பா இஷ்டப்படியே புறப்படட்டும்!'' என்று சொல்லி, நான் அவள் தலையைக் கோதி விட்டேன்.

என்னுடைய வார்த்தைகளைக் கேட்டபடியே கையில் குழந்தையுடன் உள்ளே நுழைந்த பரிமளாவின் தந்தை, ''பரிமளா! சித்தியும் நம்முடன் வரப் போகவில்லையா? 'ஏன்?' என்று கேள்'' என்றார்.

என் மனம் கொதித்தெழுந்தது. ''சித்தி வருவதா? அவள் ஒரு 'கொலைகாரி' என்ற சந்தேகம் மறுபடி ஏற்பட்டால் உதைத்து வெளியே துரத்தி விடலாம் என்ற தைரியமா? சொல்லு, பரிமளா! இந்தக் கொலைகாரி இனி ஒருபோதும் உங்கள் கால்களுக்குச் சிரமம் கொடுக்க மாட்டாள் என்று உன் அப்பாவிடம் சொல்லு!'' என்றேன்.

அவர் இரண்டடி முன் வந்து கெஞ்சும் குரலில், ''கமலம்! உன்னைச் சித்திரவதை செய்து உன் மனதைப் புண்படுத்திய நான்

நான் ஒரு கொலைகாரன். என்னை மன்னித்து விடு. பரிமளா என்னைப் பார்த்தவுடன் கேட்ட முதல் கேள்வி, 'அப்பா, சித்தி எங்கே?' என்பதுதான். அவளுக்காகவும் இதோ, இந்த 'என் குழந்தை'க்காகவும் நீ என்னுடன் வரத்தான் வேண்டும்'' என்றார்.

'என் குழந்தை' என்ற அவர் சொல் என் உள்ளக் கொதிப்பைக் கிளறிவிட்டது. ''போதும், உங்கள் குழந்தை உறவு! அவன் என் வயிற்றிலே இருக்கும்போது 'உங்கள் குழந்தை' என்று தோன்றவில்லை! ஆஸ்பத்திரியில் அவனும் நானும் உயிருக்கு எமனுடன் மன்றாடிய பொழுது 'உங்கள் குழந்தை' என்ற பாசம் எழவில்லை! இப்பொழுது, 'என் குழந்தை' என்று சொல்ல உங்களுக்கு என்ன இருக்கிறது?'' என்று நான் என்னை மறந்து இரைந்து கூறி நிறுத்தினேன்.

பிறகு அவர் எதுவுமே பேசவில்லை. அரைமணி நேரம் பலத்த ஆலோசனையுடன் குறுக்கும் நெடுக்குமாக நடந்த பிறகு, என்னை நெருங்கி வந்து மிகவும் குழைந்த குரலில், ''கமலம்! இந்தா, குழந்தையை வாங்கிக்கொள்; நான் மட்டும் இந்த வண்டிக்குப் புறப்பட்டுப் போகிறேன். போய், 'டிஸ்பென்ஸரி'யை மூடிவிட்டு வேண்டிய சாமான்களை மட்டும் எடுத்துக் கொண்டு இரண்டு நாட்களில் திரும்பி விடுகிறேன். அதுவரை நீயும் குழந்தைகளும் ஜாக்கிரதையாக இருங்கள்!' என்று சொல்லிக் கொண்டே குழந்தையை என் முன்னால் நீட்டினார்.

அவருடைய குரலில் தொனித்த குழைவும் பரிவும் என் நெஞ்சை உலுக்கியது. பாவம், என் பிடிவாதத்திற்காக அவர் செய்த முடிவு—அதனால் ஏற்படும் கஷ்டம்—இவைகளை நினைத்துப் பார்த்ததும் என் மனம் எல்லாவற்றையும் மறந்தது; தைரியமெல்லாம் எங்கோ மறைந்தது. பொங்கிவந்த துக்கத்தை அடக்க முடியாமல் விம்மிக் கொண்டே, ''என்னவோ பேசிவிட்டேன்; என்னை மன்னித்து விடுங்கள். தாயும் தந்தையு மற்ற இந்த அநாதைக்கு இனித் தாங்களே சகலமும்'' என்று கூறி அவருடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தேன்.

அவர் கீழே குழந்தையை விட்டு விட்டுத் தம் பாதங்களில் விழுந்த என்னைத் தூக்கி இரு கரங்களாலும் அணைத்துக் கொண்டார். அவர் கண்களினின்றும் வழிந்த கண்ணீர், என் கண்ணீருடன் கலந்து ஆனந்தக் கண்ணீராக மாறிக் கீழே உதிர்ந்தது.




### நல்ல அபிப்பிராயம்!

''நான் புதிதாக எழுதியிருக்கும் நாவலைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?

''இரண்டு வித அபிப்பிராயம் இருக்கிறது, ஸார்!''

''அந்த அபிப்பிராயங்கள் என்ன என்று தயவு செய்து சொல்ல முடியுமா?''

''படிக்கலாமா, வேண்டாமா என்பது தான் அந்த அபிப்பிராயங்கள்!''

★

### அப்படியா?

''என்ன, நீங்கள் நம்ம சங்கத்தின் பக்கமே இப்போதெல்லாம் வருகிறதில்லை?''

''ஆமாம், என் குடையை வைத்துவிட்டு வந்துவிட்டேன் அங்கே......!''

''அப்படியென்றால் அதற்காக அங்கே போகாமல் இருப்பானேன்?''

''நான் கொண்டு வந்த குடை இன்னும் நல்லதாயிருந்துவிட்டது!''

★

### நல்ல யோசனை!

குடியானவன்:—நம்ப காளை மாடு சில சமயம் நல்லா இருக்காப்பலே இருக்குங்க... சில சமயம் நொண்டுதுங்க...... அதுக்கு என்ன செய்யலாம்?

மிருக வைத்தியர்:— இவ்வளவுதானே? அடுத்த தடவை அது நல்லா இருக்கிற போது பார்த்து விற்று விடு, அப்பா!

★

### சரிதான்!

மனைவி:—போயும் போயும் இந்தக் காகிதப் பூவையா தலையில் வைத்துக்கொள்ள வாங்கிக்கொண்டு வந்தீர்கள்?

கணவன்:—நீ தலையை வாரிக்கொண்டு வந்து பூவை என் கையிலிருந்து வாங்கிக் கொள்ளுவதற்குள் அந்தப் பூ வாடிப் போய் விடுமே, அதனால்தான் இந்தக் காகிதப் பூவை வாங்கிக்கொண்டு வந்தேன்!

# கடுமையான கட்சி ஜுரம்!

ரஜனி

கொழும்பு, செப்டம்பர், 16

சென்ற சனிக்கிழமையும் ஞாயிற்றுக் கிழமையும் யாழ்ப்பாணத்தில் தமிழ் காங்கிரஸ் தலைவர்கள் ஒரு பலப் பரீட்சை நடத்தினார்கள். செல்வநாயகம், வன்னிய சிங்கம் கோஷ்டியார் சரித்திரப் பெருமை வாய்ந்த நல்லூரில் ஒரு பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தை சனிக்கிழமை நடத்த ஏற்பாடு செய்திருந்தனர். தமிழர்களுக்குத் தனியரசும் இலங்கைக்குச் சமஷ்டி அரசியலும் கோருவதுதான் இந்தக் கூட்டத்தின் நோக்கம். ஆனால் "கூட்டம் நடைபெறக் கூடாது" என்று கோஷம் செய்து கொண்டு பொது ஜனங்கள் அமளி துமளி செய்யவும் போலீசார் கூட்டம் நடப்பதைத் தடை செய்து விட்டனர்.

மறுநாள் மந்திரி பொன்னம்பலம் தலைமையில் அகில இலங்கை தமிழ் காங்கிரஸ் பொதுச் சபை கூடியது. சமஷ்டி வாதிகளான ஸ்ரீ செல்வநாயகம், ஸ்ரீ வன்னிய சிங்கம் முதலியோரையும் காங்கிரஸ் பொதுக் காரியதரிசிகளான டாக்டர் நாகநாதன், ஸ்ரீ மோத்தா, ஸ்ரீ வி. கே. பரமநாதன் ஆகியோர்களையும் காங்கிரஸிலிருந்து வெளியேற்றுவதென்றும் செல்வநாயகமும் வன்னிய சிங்கமும் தங்களது பார்லிமெண்டு ஸ்தானங்களை ராஜினாமாச் செய்யவேண்டுமென்றும் அப்போது ஏகமனதாகத் தீர்மானிக்கப்பட்டது.

இந்தக் கூட்டங்களுக்குப் பிறகு இரு போட்டி கோஷ்டிகளுக்கு மிடையில் சமரசமேற்படுவதென்பது அசாத்திய மாகிவிட்டது. தமிழர், இலங்கையை சுற்றிக் கொடியின் கீழ் தனி சுயாட்சிப் பிரதேசமாகப் பிரித்தாலொழியச் சிங்கள ஆதிக்கத்திலிருந்து தமிழர்கள் தலை தூக்கவே முடியாதென்கிறார்கள். சமஷ்டி வாதிகள் சிங்களவர்களுடன் ஒத்துழைத்தால்தான் சொற்ப நன்மைகளையேனும் பெற முடியுமென்பது மந்திரி பொன்னம்பலத்தின் கட்சி.

## பட்டினி போடும் கொடுமை

ரோபரி என்ற தோட்டத்திலே இப்பொழுது நடக்கும் வேலை நிறுத்தத்தில் தோட்ட முதலாளியான ஐரோப்பியர் தொழிலாளரைப் பட்டினி போட்டு வதைப்பதாகப் புகார்கள் கிடைக்கின்றன. சென்ற ஒரு வார காலமாக வேலை நிறுத்தம் செய்யும் ஆயிரத்து நானூறு இந்தியத் தொழிலாளருக்கும் அரிசி விநியோகத்தைத் தோட்ட முதலாளி நிறுத்திவிட்டார். தோட்டத்துக்கு அரிசி மூட்டைகள் கொண்டுவரக் கூடாது என்றும் உணவுப் பொருள்களைத் தொழிலாளருக்குக் கடனாகக் கொடுக்கக் கூடாதென்றும், தோட்டத்திலுள்ள கடைகளுக்குத் தோட்ட முதலாளி கண்டிப்பான உத்தரவு போட்டிருக்கிறார்.

ரோபரி, நகரப் புறத்திலிருந்து நாற்பத்திரண்டு மைல்களுக் கப்பாலிருப்பதால் உணவுப் பொருள்கள் சுலபமாகத் தோட்டத்துக்குள் வருவதற்கில்லை. அத்துடனல்லாமல் தோட்டத்துக்கு வரும் ஒன்பது மைல் தூர ரஸ்தாவில் எவ்வித போக்குவரத்துகளும் செல்ல முடியாதபடி தோட்டத் துரை அடைத்து விட்டாராம்.

இலங்கை இந்திய காங்கிரஸ் கூட்டுப் பொதுக் காரியதரிசி ஸ்ரீ நாயர், இந்திய பார்லிமெண்ட் மெம்பர் ஸ்ரீ எஸ். எம். சுப்பையா ஆகியவர்கள் நேற்று கால் நடையாகப் பதினெட்டு மைல் தூரம் நடந்து தோட்டத்துக்கு நேரில் சென்ற பொழுதுதான் வெள்ளை முதலாளி தொழிலாளரைப் பட்டினி போட்டுப் பணிய வைக்க முயன்றது வெளியாயிற்றாம். உடனே பதுளை நகரத்திலிருந்து நாற்பது மூட்டை அரிசியை ஸ்ரீ நாயர் தருவித்தார். அந்த மூட்டையுடன் வந்த லாரியையும் ஒன்பது மைல் தூரத்துக்கு அப்பால் தோட்டத் துரை தடுத்து விட்டாராம். தொழிலாளர் அந்த ஒன்பது மைல் தூரமும் அரிசி மூட்டைகளை முதுகில் சுமந்து தோட்டத்துக்குக் கொண்டு வந்து சேர்த்தார்கள். ஒவ்வொரு தொழிலாளிக்கும் இலவசமாக அரிசியும் மற்ற சாமான்களும் வாங்க ரொக்கப் பணமும் காங்கிரஸ் கொடுத்தது.

ரோபரி தோட்ட வேலை நிறுத்தத்துக்கு ஆதரவு தெரிவித்து மற்ற தோட்டத் தொழிலாளர் பண உதவி செய்து வருகிறார்கள்.

## உதவி மந்திரியின் செய்தி

இந்துக்களின் புராதன க்ஷேத்திரமான திருக்கேதீஸ்வரத்தைப் புனருத்தாரணம் செய்ய யாழ்ப்பாண நகர மண்டபத்தில் நடந்த பொதுக் கூட்டத்துக்கு உதவி கல்வி மந்திரி ஸ்ரீ கே. கனகரத்தினம் ஒரு செய்தி அனுப்பியிருந்தார். "இலங்கை சுதந்திர மடைந்ததும் இங்குள்ள நம் பௌத்த சகோதரர்கள் என்ன செய்கிறார்கள்? பழங் கதையாய், கனவாய் மறைந்திருந்த பௌத்த புராதன ஆலயங்களைப் புதுப்பிப்பதில் அவர்கள் முனைந்திருக்கிறார்கள். இந்துக்களின் புராதன க்ஷேத்திரமான திருக்கேதீஸ்வரத்தைப் புதுப்பிக்க வேண்டுமென்று தமிழர்களின் தனிப் பெருந் தலைவரான ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் 1879-ம் ஆண்டில் வற்புறுத்தினார். அவருடைய ஆவலைப் பூர்த்தி செய்யும் காலம் நெருங்கி விட்டது" என்று அவர் தமது செய்தியில் குறிப்பிட்டிருப்பது தமிழர்களுக்கு விசேஷ உற்சாகத்தைக் கொடுத்திருக்கிறது.

## யாழ்ப்பாணத் துறைமுகம்

வட இலங்கைத் துறைமுகங்களில் ஒன்றை வியாபாரப் போக்குவரத்துக்கு மட்டுமே திறக்க வேண்டுமென்றும் பிரயாணத்துக்குத் திறப்பது விரும்பத்தக்கதல்லவென்றும் தமிழ் மந்திரி ஸ்ரீ ஜி. ஜி. பொன்னம்பலம் தம்முடைய அபிப்பிராயத்தை வெளியிட்டிருக்கிறார். யாழ்ப்பாணத்திலிருந்து தினசரி இந்தியாவுக்குப் போகிறவர்களின் எண்ணிக்கை ஐந்தாறு கூட இருக்காதாம். அவ்வளவு குறைந்த தொகையினருக்காக யாழ்ப்பாணப் பகுதியில் ஒரு முதல் நம்பர் குவாரன்டைன் முகாம், சுங்க இலாகா நிலையங்கள் முதலியவைகளை யெல்லாம் லட்சக்கணக்கான ரூபாய் செலவில் ஏற்படுத்துவதா என்று ஸ்ரீ பொன்னம்பலம் கேட்கிறார்.

இப்பொழுது யாழ்ப்பாணத்திலிருந்து இந்தியாவுக்குப் போகிறவர்கள் அதிகமில்லை. எனினும், யாழ்ப்பாணத் துறைமுகமொன்று விருத்தி செய்யப்பட்டுக் கப்பல் வியாபாரம் பெருகுமானால் யாழ்ப்பாணத்திலிருந்து அடிக்கடி இந்தியாவுக்குப் போகிறவர்களின் எண்ணிக்கையும் இந்தியாவிலிருந்து யாழ்ப்பாணத்துக்கு வருகிறவர்களின் எண்ணிக்கையும் பன்மடங்கு அதிகரிக்கும் என்பது நிச்சயம். வியாபாரத்தின் பொருட்டுக் கொழும்பு, கண்டி முதலான இலங்கையின் இதர பாகங்களிலிருந்து நூற்றுக் கணக்கானவர்கள் யாழ்ப்பாணம் சென்று அங்கிருந்து இந்தியாவுக்குப் போக விரும்புவதும் இயற்கை. அரசாங்கத் திட்டத்தின்படி வட இலங்கைத் துறைமுகமொன்று வர்த்தகப் போக்குவரத்துக்கு அபிவிருத்தி செய்யப்பட்டால், அதைத் தொடர்ந்து ஜனப் போக்குவரத்தும் எதிர்காலத்தில் பெருகவே செய்யுமென்ற தீர்க்க தரிசனத்துடன் இப்பிரச்னையை நோக்கவேண்டும்.

வித்வான்:—அடடா, கொஞ்ச நாழியாவது நிம்மதியா 'ஸாதகம்' பண்ணுவோம்னு முடியலையே! இந்தச் சனியன் ஏன் இப்படி அழுது தொலைக்கிறது?

மனைவி:—நீங்கள் பாட ஆரம்பித்ததிலிருந்துதான் குழந்தை பயந்துண்டு இப்படி அழறது! உங்கள் பாட்டைக் கொஞ்சம் நிறுத்துங்கோ!



# சுதந்திர மாளிகை

ஜயமணி

## 12. மாகாண சபைகளின் அதிகாரங்கள்

[அரசியல் நிர்ணய மகாசபையின் கூட்டம் சென்ற ஜூலை மாதம் 30-ம் தேதி மீண்டும் ஆரம்பமாகியது. அரசியல் திட்டங்களில் ஏற்கெனவே ஒத்திவைக்கப்பட்டிருந்த பல ஷரத்துகளும் உப ஷரத்துகளும் அந்தக் கூட்டத்தில் விவாதித்து முடிவு செய்யப்பட்டன. புதிதாகப் பல ஷரத்துகளும் சேர்க்கப்பட்டன. நிறைவேறிய ஷரத்துகளின் விவரம் பின்வருமாறு:]

**நீதிபதிகள்:** சுப்ரீம் கோர்ட் பிரதம நீதிபதிக்கு மாதச் சம்பளம் ஐயாயிரம் ரூபாய் என்றும், மேற்படி கோர்ட்டைச் சேர்ந்த மற்ற நீதிபதிகள் ஒவ்வொருவருக்கும் மாதச் சம்பளம் நாலாயிரத்து ஐந்நூறு ரூபாய் என்றும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

ஹைகோர்ட் பிரதம நீதிபதியின் மாதச் சம்பளம் நாலாயிரம் ரூபாய் என்றும் மற்ற ஹைகோர்ட் நீதிபதிகளின் மாதச் சம்பளம் மூவாயிரத்து ஐந்நூறு என்றும் முடிவாகியிருக்கிறது.

**சட்ட சபைகள்:** ஒரு மாகாணத்திலுள்ள மேல் சபையை (கவுன்ஸில்) ரத்து செய்யவும், மேல் சபை இராத மாகாணத்தில் அத்தகைய சபையைச் சிருஷ்டிக்கவும் சட்டம் செய்ய இந்தியா பார்லிமெண்டுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது. எனினும், அவ்வாறு ரத்து செய்ய வேண்டும் என்றோ அல்லது சிருஷ்டிக்க வேண்டும் என்றோ முதலில் மாகாண அசெம்பிளியில் ஆஜராகியுள்ள மூன்றில் இரண்டு மடங்கு அங்கத்தினர்களின் ஆதரவைப் பெற்று ஒரு தீர்மானம் நிறைவேற வேண்டும். அந்தத் தீர்மானத்தை ஒட்டியே பார்லிமெண்டுக்குச் சட்டம் செய்ய அதிகாரம் உண்டு.

அசெம்பிளியில் நிறைவேறிய எந்த மசோதாவும் கவுன்ஸிலின் பரிசீலனைக்கு அனுப்பப்பட வேண்டும். அத்தகைய மசோதாவைக் கவுன்ஸில் நிராகரித்தாலும், அவ்வாறு அனுப்பப்பட்ட தேதியிலிருந்து மூன்று மாதங்கள் கடந்து விட்டாலும், அல்லது மசோதாவில் கவுன்ஸில் திருத்தங்கள் செய்து அதை நிறைவேற்றினாலும் அந்த மசோதா மறுபடியும் அசெம்பிளியின் பரிசீலனைக்கு வரும். அசெம்பிளி அந்தத் திருத்தங்களை அங்கீகரித்தோ அல்லது நிராகரித்தோ மசோதாவை மறுபடியும் கவுன்ஸிலுக்கு அனுப்ப வேண்டும். அவ்வாறு இரண்டாவது தடவையாகப் பரிசீலனைக்கு வரும் மசோதாவைக் கவுன்ஸில் நிராகரித்தாலும், மசோதா ஆலோசனைக்கு வந்து ஒரு மாதம் கடந்து விட்டாலும், அல்லது கவுன்ஸில் அதில் மேற்கொண்டு திருத்தங்கள் செய்து அதை நிறைவேற்றினாலும், அந்த மசோதா இரண்டு சபைகளிலும் நிறைவேறி விட்டதாகவே கருதப்படும். அசெம்பிளி அங்கீகரித்தாலன்றி கவுன்ஸில் செய்யும் திருத்தங்கள் அமுலுக்கு வராது.

மாகாண சட்ட சபைகளில் நிறைவேறும் மசோதாக்களில் நிதி சம்பந்தமானவற்றைத் தவிர, மற்ற எந்த மசோதாவையும் புனராலோசனை செய்யும்படி கூற கவர்னருக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது.

சட்ட சபைகளில் நிறைவேறிய குறிப்பிட்ட மசோதாவை கவர்னர் குடியரசுத் தலைவரின் ஆலோசனைக்கு அனுப்பலாம். திருத்தங்களுடன் அந்த மசோதாவை மீண்டும் பரிசீலனை செய்வதற்காகச் சட்ட சபையில் சமர்ப்பிக்குமாறு குடியரசுத் தலைவர் கவர்னருக்குக் கட்டளை பிறப்பிக்கலாம். அவ்வாறு திரும்பி வந்த மசோதாவைச் சட்ட சபைகள் அதிலிருந்து ஆறு மாத காலத்துக்குள் புனராலோசனை செய்ய வேண்டும். குடியரசுத் தலைவர் குறிப்பிட்ட திருத்தங்களுடனோ அல்லது அந்தத் திருத்தங்கள் இல்லாமலோ மசோதா நிறைவேறுமாயின்,

அது மறுபடியும் குடியரசுத் தலைவரின் ஆலோசனைக்கு அனுப்பப்பட வேண்டும்.

இந்திய சர்க்காரின் நேர் நிர்வாகத்தில் இருந்து வரும் டில்லி, ஆஜ்மீர்—மர்வார், குடகு போன்ற பிரதேசங்களுக்கு நியமன அங்கத்தினர்கள் அல்லது தேர்ந்தெடுக்கப்படும் அங்கத்தினர்கள் அடங்கிய சட்ட சபையைச் சிருஷ்டிக்கவும், ஆலோசகர் சபையையோ அல்லது மந்திரி சபையையோ நியமிக்கவும் பார்லிமெண்டுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது.

அந்தப் பிரதேசங்களுக்கு என்று பிரத்தியேகமாக ஹைகோர்ட்டுகளை ஸ்தாபிக்கவும் பார்லிமெண்டுக்கு அதிகாரம் உண்டு. அவ்வாறு ஹைகோர்ட்டை ஸ்தாபிக்க முடியாத இடத்தில் சமீபத்திலுள்ள மாகாண ஹைகோர்ட்டின் அதிகாரத்துக்கு உட்பட்டதாக அந்தப் பிரதேசம் இருக்க வேண்டும் என்று நிர்ணயிக்க பார்லிமெண்டுக்கு அதிகாரம் உண்டு.

பார்லிமெண்டில் வேறு சட்டம் நிறைவேறும் வரையில், குடகின் நிர்வாக முறை சட்ட சபை முதலியன தற்போது இருப்பதுபோலவே நீடித்துவரும்.

அவசரச் சட்டங்கள்: யுத்தம், வெளிநாட்டின் படையெடுப்பு, உள் நாட்டுக் கலகம் போன்ற காரணத்தால் இந்தியாவுக்கோ அல்லது இந்தியாவைச் சேர்ந்த ஏதாவதொரு பிரதேசத்துக்கோ ஆபத்து ஏற்படலாம் என்று குடியரசுத் தலைவர் கருதினால், அத்தகைய சந்தர்ப்பங்களில் அவசரச் சட்டம் பிறப்பிக்கத் தலைவருக்கு அதிகாரம் உண்டு. அந்தச் சட்டம் இரண்டு மாதகாலம் வரையில்தான் அமுலில் இருக்கும். அந்த கெடுவுக்குள் அதைப் பார்லிமெண்டும் ராஜாங்க சபையும் அங்கீகரித்து அதன் ஆயுட்காலத்தை மேற்கொண்டு நீடிக்கலாம்.

பார்லிமெண்டு கலைக்கப் பட்டிருக்கும் போது மேற்படி அவசரச் சட்டம் பிறப்பிக்கப் பட்டால், மீண்டும் பார்லிமெண்டு ஆரம்பமான ஒரு மாதத்துக்கு மேற்பட்டு அந்தச் சட்டம் செல்லுபடியாகாது. அந்த ஒரு மாதத்துக்குள் பார்லிமெண்டும் ராஜாங்க சபையும் அந்த அவசரச் சட்டத்தை அங்கீகரித்து அதன் ஆயுட்காலத்தை நீடிக்கலாம்.

வெளியாரின் படையெடுப்பிலிருந்தும் உள்நாட்டுக் கலகத்திலிருந்தும் ஒவ்வொரு மாகாணத்தையும் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு சட்டப்படி இந்திய சர்க்காரைச் சார்ந்தது. இந்திய அரசியல் திட்ட ஷரத்துகளுக்கு முரணின்றி ஒவ்வொரு மாகாணத்தின் நிர்வாகமும் நடைபெறுமாறு பார்த்துக் கொள்ள வேண்டியதும் இந்திய சர்க்காரின் கடமையாகும்.

மாகாண நிர்வாகத்தில் நெருக்கடியான நிலைமை ஏற்படுமாயின், மேற்படி நிர்வாகத்தையும், கவர்னர், சட்ட சபைகளின் அதிகாரங்களையும் நிறுத்தி வைக்கவும் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் உண்டு. தலைவர் விடுக்கும் அவசரச் சட்டப் பிரகடனத்தின் மூலம் மேற்படி அதிகாரங்கள் நிறுத்தி வைக்கப்படும். அத்தகைய சந்தர்ப்பங்களில் பார்லிமெண்டினுடைய அதிகாரத்தின் கீழ் மாகாண நிர்வாகம் நடைபெற்று வரும்.

மாகாண நிர்வாக சம்பந்தமாக அரசியல் திட்டத்திலுள்ள எந்த ஷரத்தையும் நிறுத்தி வைக்கக் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது. எனினும், ஹைகோர்ட்டின் அதிகாரங்களில் தலையிட அவருக்கு உரிமை இல்லை.

தாம் பிறப்பித்த அவசரச் சட்டத்தை மற்றொரு அவசரப் பிரகடனத்தின் மூலம் ரத்து செய்யவோ மாற்றவோ தலைவருக்கு அதிகாரம் உண்டு.

பார்லிமெண்டினால் அங்கீகரிக்கப்பட்டாலன்றி அவசரச் சட்டம் இரண்டு மாதங்களுக்குமேல் அமுலில் இருக்க முடியாது. பார்லிமெண்டினால் அங்கீகரிக்கப்பட்ட அவசரச் சட்டம் ஆறு மாதங்கள் வரையில்தான் அமுலில் இருக்கும். எனினும் பார்லிமெண்டு அதை மேற்கொண்டு ஆறுமாத காலத்துக்கு நீடிக்கலாம்.

எந்த அவசரச் சட்டத்தையும் மூன்று வருஷ காலத்துக்கு மேல் அமுல் நடத்த தலைவருக்கோ, பார்லிமெண்டுக்கோ யாருக்கும் அதிகாரம் இல்லை.

அவசரச் சட்டத்தின் மூலம் மாகாண நிர்வாகம் நிறுத்திவைக்கப் பட்டிருக்கும் போது, அவ்விஷயமாகச் சட்டம் செய்யும் அதிகாரத்தைப் பார்லிமெண்டு குடியரசுத் தலைவருக்கோ, அல்லது அவரால் குறிப்பிடப்பட்ட வேறு அதிகாரிக்கோ மாற்றலாம்.

பார்லிமெண்டுக் கூட்டம் நடைபெறாத சமயங்களில் இந்திய சர்க்கார் நிர்வாக சம்பந்தமாகவும் அவசரச் சட்டம் பிறப்பிக்கக் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் அளிக்கப் பட்டிருக்கிறது.

அவசரச் சட்டத்தின் மூலம் மாகாண நிர்வாகம் நிறுத்தப் பட்டிருக்கும்போது, ஜீவாதார உரிமைகள் சம்பந்தமாகக் கோர்ட்டில் வழக்குத் தொடர யாருக்கும் உரிமையில்லை என்றும், அவ்விஷயமாகக் கோர்ட்டில் ஏற்கெனவே விசாரணையிலிருந்து வரும் வழக்குகளும் அவசரச் சட்டம் அமுலில் இருக்கும் வரையில் நிறுத்தி வைக்கப்படும் என்றும் தலைவர் உத்தரவு பிறப்பிக்கலாம்.

# தேசபக்தன்

எஸ்.வி.எஸ்

"என்ன அண்ணாச்சி! உங்களுக்கு இந்த ஊர்தானா?"

"ஆமாம், ஏன்?"

"பின்னே ஏன் டேலாட்டாவை எச்சில் பண்ணிக் குடிக்கிறீங்க? அது நம்ம ஊரு பழக்கமில்லை, தெரியுங்களா?"

"நான் இந்த ஊரை விட்டுப் போய்ப் பதினைந்து வருஷத்துக்கு மேலாச்சு, பாருங்க! அதனாலே நம்ம பழக்கமெல்லாம் மறந்துபோய்விட்டது. பட்டணத்துப் பழக்கமே தொடர்ந்து வருது!"

இவ்விதம் பழையனூர் 'ஆயா ஓட்டல்' முதலாளிக்கும் காப்பி குடித்துக்கொண்டிருந்த நபருக்கும் சம்பாஷணை நடந்து கொண்டிருந்தது. அப்போது காப்பி குடித்துவிட்டு, பெட்டியடியிலே போடப்பட்டிருந்த பெஞ்சி மேலே உட்கார்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருந்த ஒரு தாடிக்கார ஆசாமி, "அப்படியானால் ஐயாவுக்குச் சொந்த ஊரு இதுதானா?" என்றான்.

காப்பி சாப்பிட்டுக் கொண்டிருந்த ஆசாமி, "இதே ஊர்தான்: இந்த ஊரில் தான் பிறந்து வளர்ந்தேன். இங்கேதான் படித்தேன், தடியடி பட்டேன்......... எல்லாம் இங்கேதான்!" என்றார்.

"என்ன சொன்னீங்க? என்ன சொன்னீங்க?" என்று மிக்க பரபரப்புடன் கேட்டார் ஹோட்டல் முதலாளி.

தாடிக்கார ஆசாமி குறுக்கிட்டு, "சுரைக்காய்க்கு உப்பில்லை என்றார். அதுதான் சொல்றாரே, தடியடி பட்டு முதுகு வீங்கிப் போச்சுன்னு. இன்னும் என்ன கேள்வி?" என்றார்.

இந்தக் குரலைக் கேட்டதும் காப்பி சாப்பிட்டுக்கொண்டிருந்தவர் திரும்பிப் பார்த்தார். அதற்குள் தாடிக்கார ஆசாமி முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டு விட்டார். எனினும் காப்பி சாப்பிட்டுக் கொண்டிருந்த ஆசாமி, "தடியடின்னு ஏதோ வித்தியாசமாக நினைச்சுப்புடாதீங்க! உப்பு சத்தியாக்கிரகத்தின்போது சத்தியாக்கிரகம் செய்து போலீஸ் குண்டாந்தடி அடி பட்டதைச் சொல்கிறேன்" என்றார்.

ஹோட்டல் முதலாளி, "ஓகோ! நீங்க தேச பக்தருங்களா? தியாகிங்களா? அப்படியா, சமாசாரம்!" என்று சொல்லிக் கொண்டே ஏளனமாகச் சிரித்தார்.

காப்பி சாப்பிட்டுக் கொண்டிருந்த ஆசாமி கடைசி மடக்கும் குடித்துவிட்டு டம்ளரை மேஜையின் மேல் வைத்துவிட்டு எழுந்தார். "இப்போதெல்லாம் தான் தேசபக்தன் தியாகின்னு கேவலமாகப் போச்சே! அந்தக் காலத்திலே என்ன மதிப்பு! என்ன மரியாதை! அது கிடக்கட்டுங்க—கேட்க வந்த காரியத்தை விட்டுவிட்டு என்னவெல்லாமோ பேசுகிறேனே.........இந்த ஊரில் வாத்தியார் சங்கர சுப்பய்யா பிள்ளை சௌக்கியமாக இருக்காரா?" என்றார்.

"அவர் காலமாகி ஆறு வருஷத்துக்கு மேலாச்சுதே!' என்றார் ஹோட்டல் முதலாளி.

"அவருடைய மகன் ஆறுமுகம் என் கூடப் படித்தான். நாங்க இரண்டு பேரும் அண்ணன் தம்பி மாதிரி பழகி வந்தோம். அவனுக்குத்தான் அந்தக் காலத்திலே எவ்வளவு தேச பக்தி! மகாத்மா காந்தியைத் தெய்வமாகக் கும்பிட்டு வந்தான். நேருவை நெஞ்சிலிருத்தி தினமும் வணங்கி வந்தான். ராஜாஜியின் அறவுரைகளை வேதமாகப் போற்றி



"என்ன ஸார் இது! இரண்டு லாரியிலே சாமான்களைப் போட்டு இரண்டு வாரமாக இங்கேயே வைத்திருக்கிறார்களே ஏன்?"

"இதோ இந்த வீடு அடுத்த மாதம் காலியாகலாம் போலத் தெரிகிறதாம். அதற்காகத்தான் காத்திண்டிருக்கு சாமான்களெல்லாம்!"



வந்தான். இப்ப அவன் எங்கே இருக்கிறானோ?" என்று சொல்லிக்கொண்டே பில் பணத்தை எடுத்து மேஜையின்மேல் வைத்தார்.

இந்தப் பேச்சில் சிரத்தை இல்லாதவர் போல் தாடிக்கார ஆசாமி கடைசி வெற்றிலையையும் உள்ளே தள்ளிவிட்டு, மிச்ச மிருந்த சுண்ணாம்பை உருட்டித் திரட்டிக் கோணமாக்கி வாய்க்குள் எறிந்து விட்டு நடையைக் கட்டினார்.

அந்த ஆசாமி இத்தனை நாழிகை அவர்கள் பேச்சில் வலிய தாமே குறுக்கே நுழைந்து பேசினாரே, போகும் போது அவர்களிடம் ஒரு வார்த்தை சொல்லிக்கொண்டு போகப் படாதோ? ஹோட்டல் சம்பிரதாயத்தில் அது அவசியமில்லை போலும்! ஆனால் இந்த உலகத்தைப் பார்க்கும்போது இதுவும் ஒரு ஹோட்டல்தானோ என்று தோன்றுகிறது. நாமும் பிறக்கும்போது யாரிடமும் சொல்லிக்கொண்டு பிறப்பதில்லை; சாகும்போதும் யாரிடமும் சொல்லிக் கொண்டு போவதில்லை!

தாடிக்கார ஆசாமி புறப்பட்டுப் போனதை அவர்கள் பொருட்படுத்தாமல் தங்கள் சம்பாஷணையைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தார்கள். ஊருக்குப் புதியவர் ஆறுமுகத்தின் தேச பக்தனை ரொம்பவும் பாராட்டவே, "போதும்! நிறுத்துங்க! பெரிய தேச பக்தனும், நல்ல தேச பக்தன்! அவன் இப்போ போலீஸிலே அல்ல இருக்கான்!" என்றார் ஹோட்டல்காரர்.

"என்ன! ஆறுமுகம் போலீஸ்காரனாகவா ஆயிட்டான்!"

"ஆமாம்!"

"அவன் தேச பக்தி என்ன, அன்று அவன் பேசிய பேச்சு என்ன! அதெல்லாம் நினைச்சால் அவன் போலீஸ்காரனாக ஆயிருப்பான் என்று என்னால் நம்பவே முடிய வில்லையே!"

"அப்படியானால் என் பேச்சிலே உங்களுக்கு நம்பிக்கை இல்லை என்று சொல்லுங்க?" என்றார் ஹோட்டல் முதலாளி.

"இல்லை, இல்லை; நம்பறேன்! பாவம், ஏழை! வயிற்றுப் பிழைப்புக்காகப் போலீஸிலே சேர்ந்திருப்பான்!"

இவ்விதம் ஹோட்டல்காரரும் ஊருக்குப் புதியவரும் வெகு நேரம் வரை அக்கப்போர், பழைய சமாசாரங்கள் புதிய விவகாரங்கள் எல்லாம் பேசிக் கொண்டிருந்தனர். அவர்களுடைய பேச்சுக்கு முற்றுப் புள்ளி வைப்பதற்காக வந்தது போல் தூரத்தில் ஒரு சிவப்புத் தொப்பி தெரிந்தது. ஒரு வேளை ஆறுமுகம்தான் வருகிறானோ என்று கூர்ந்து நோக்கினர். அவன் ஆறுமுகமல்ல என்று தெளிந்த பின்னர், அவர்கள் சம்பாஷணையை மறுபடியும் தொடர்ந்தார்கள். அப்படித் தொடர்ந்து கொஞ்ச நேரம்தான் ஆகியிருக்கும்; சிவப்புத் தலைப்பாக்காரன் ஹோட்டலுக்குள் நுழைந்து ஊருக்குப் புதிதாக வந்தவரிடம் ஒரு கடிதத்தை நீட்டினான். புதிய ஊரில் சற்றும் எதிர்பாராத சமயத்தில் ஒரு கடிதம் கிடைப்பதென்றால் எப்படி யிருக்கும்? அதுவும் தம் முழுப் பெயராகிய 'ஆ. கி. ஷண்முகம் பிள்ளை' என்பதைத் தெளிவாக எழுதி விலாசமிட்டுக் கிடைப்பது என்றால் சந்தோஷமாகத்தானே இருக்கும்? ஆனால்.....?

"அன்பார்ந்த ஷண்முகத்துக்கு,

வெகு நாட்களுக்குப் பிறகு உன்னைப் பார்த்ததில் எனக்கு எவ்வளவோ சந்தோஷம். அந்தக் காலத்திலே நீ தேசத்துக்காக

எவ்வளவு தியாகங்கள் செய்தாய்! உன்னுடைய சொத்தெல்லாம் ஏலத்தில் போயிற்று. பலமுறை நீ சிறையில் கிடந்து உழன்றாய்; அப்பொழுதெல்லாம் உன்னைப் போல் நானும் தேச பக்தனாக இருக்க முடியவில்லையே என்று எனக்கு ஏக்கமாக இருக்கும். ஏன், ஒரு சாண் வயிற்றைக் கழுவுவதற்காகத் தேசத் துரோகியாக—போலீஸ்காரனாக—இருக்கிறோமே என்று நான் வருத்தப்பட்டது கூட உண்டு

ஆனால் இன்று உன்னை அகஸ்மாத்தாகச் சந்தித்ததில் ஏற்பட்ட சந்தோஷம் கணநேரம் கூட நிற்கவில்லை. காரணம், இன்று உன்னில் என் பழைய பால்ய நண்பனைப் பார்க்கவில்லை; நீ தேச பக்தனாகவும் தியாகியாகவும் மலர்ந்தாயே, அந்த உருவத்தையும் காணவில்லை. நெல்லைப் பதுக்கிவைத்துக் கொள்ளை லாபம் அடிக்கும் சோதகனைப் பார்த்தேன்; சிமெண்டு மூட்டைகளை ஒன்றுக்கு நாலுபங்கு விலை வைத்து விற்கும் பேராசைக்காரனைப் பார்த்தேன்; நாலு தடவை பிடிபட்டும் சர்க்காருக்கு அபராதம் செலுத்தியும் ஐந்தாவது தடவையாகக் கள்ள மார்க்கெட் வியாபாரம் செய்து அகப்பட்டுக் கொண்ட பாவியைப் பார்த்தேன்; இந்தத் தடவை வெறும் அபராதம் செலுத்துவதுடன் போகாது, சிறைவாசமும் செய்ய நேரும் என்று பயந்து தலைமறைவாகத் திரியும் கள்ளனைப் பார்த்தேன். மிக்க வருத்தம் ஏற்பட்டது. பத்தரை மாற்றுத் தங்கம் கூட இரும்பு உலோகமாக மாறியது காலத்தின் கோளாறோ என்று தோன்றியது.

இருந்தாலும் என் கடமை உன்னைக் கைது செய்வது. ஆனால் நம் பால்ய சிநேகம் 'கைது செய்யாதே, பிழைத்துப் போகட்டும்!' என்று வற்புறுத்தியது. என் அந்தராத்மா அதற்கு மசியவில்லை. 'நீ செய்ததெல்லாம் தேசத் துரோகம்; நீ அனுதாபத்துக்கு அருகனல்ல' என்று அது சாதிக்கிறது. நாட்டில் உணவுப் பஞ்சம் வந்து விடுமோ என்று பயந்து நம் தேசத் தலைவர்களே ஏர் பிடித்து உழுதும், தங்கள் உணவில் மரவள்ளி போன்ற கிழங்கு வகைகளைக் கலந்து உண்டும் வரும் போது உன்னைப் போன்ற கொள்ளைக்காரர்கள் முதல் நம்பர் தேசத் துரோகிகளாவார்கள். இம்மாதிரி தேசத் துரோகிகளைத் தப்பவைப்பது மன்னிக்க முடியாத குற்றம்.

ஆனாலும் என் கையாலேயே உன்னைக் கைது செய்ய என் மனம் இடம் கொடுக்கவில்லை. அதனால்தான் இந்தப் போலீஸ்காரரை அனுப்பியிருக்கிறேன். இவருடன் கையில் விலங்கு மாட்டிக்கொண்டு நீ ஸ்டேஷனுக்கு வந்து சேரவும்.

இப்படிக்கு,
ஆயா தோட்டத்தில்
தாடியுடன் உன்னை வேவு பார்த்த
பால்ய நண்பன்,

ஆறுமுகம்.

"ஆறுமுகம்! நீதான் உண்மையான தேச பக்தன் என்று நான் எத்தனை தரம் அந்த நாட்களில் சொல்லியிருக்கிறேன்! இன்றும் அதையேதான் சொல்லுகிறேன்!" என்று சொல்லிக்கொண்டே போலீஸ் ஸ்டேஷனை நோக்கி நடந்தார் ஊருக்குப் புதியவர்.




வீட்டுக்காரி:—எங்காத்துக்காரர் என்ன காரியம் செய்திண்டிருந்த போதிலும், என் ஞாபகம் அவருக்கு இருந்திண்டே யிருக்கும்!

வந்தவன்:—அதுதான் நன்றாய்த் தெரிகிறதே, அவர் அறைஞ்சு அறைஞ்சு துணியைத் தோய்க்கிறதிலே யிருந்தே!

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி

266. புதல்வரால் பொலிந்தான் உந்தை!

தன்னிடம் ஏதோ குற்றம் இருந்தது போல எண்ணி, அவைகளுக்கும் பரிகாரம் ராமனுடைய தஞ்சம்தான், என்று கருதியவனாய் விபீஷணன் பரவசம் அடைகிறான். அவனைச் சுக்கிரீவன், ராமன் இருந்த இடத்துக்கு அழைத்துச் செல்லுகிறான்.

ராமனது திவ்ய திருமேனி விபீஷணனுடைய கண்ணுக்குப் புலனாகிறது. விபீஷணனுடைய உள்ளம் எப்படி ஈடுபடுகிறது!

விபீஷணன் ராமனது உருவத்தை மனசில் எண்ணி எண்ணி அவனுக்கு ஒரு உருவம் கொடுத்திருந்தான். அந்த உருவத்தில் நவரத்தின கசிதமான ஆரத்தை மார்பில் பார்த்திருக்கிறான். அப்படியே ராமனது பரந்த தோளில் பிரகாசமான தோள் வளையத்தை வைத்து அனுபவித்து வந்தான்.

இப்போது பார்க்கிற ராமனது மார்பில் அந்த ஆரம் இல்லை. தோளிலும் தோள் வளையம் இல்லை.

அப்படி ஆரமும் தோள் வளையமும் இல்லாமல் இருந்தாலும் ஒரு அதி அற்புதமான அழகைக் கொடுக்கிறது ராமனுக்கு.

⁂

மழை நீரைத் தாங்கிய மேகம் இந்திரனது வில்லை (வானவில்லை) தாங்கி இருந்து, பிறகு அது மறைவதையும் பார்த்திருக்கிறோம். அப்படி வானவில் தோன்றுவதும் மறைவதும் விபீஷணனது ஞாபகத்துக்கு வருகின்றன.

படர்மழை சுமந்தகா லைப்,
பகர்வரும் அமரர்கோ மான்
அடர்சிலை துறந்ததென் ன,
ஆரந்நீர் மார்பினா னைக்;
கடர்கடை மத்திற்பாம் பு
கழற்றிய தென்னக்,கா சின்
சுடரொளி வலயம்தீர்ந் த
சுந்தரத் தோளினா னை.

[படர் மழை சுமந்த காலை: வானத்தை நிரப்பி நின்று மழை நீரைத் தாங்கிக்கொண்டிருந்த; பகர்வரும்: எடுத்துச் சொல்லமுடியாத அழகு வாய்ந்ததான; அமரர் கோமான் அடர்சிலை: தேவேந்திரனது மாபெரும் வில்லை (வானவில்லை) துறந்ததென்ன: மறைந்ததென்று சொல்லும்படியான; ஆரந்நீர் மார்பினானை: நவரத்தின கண்டி இல்லாத மார்பை யுடைய ராமனை; கடர்கடை மத்திற் பாம்பு கழற்றிய தென்ன: பாற்கடலை மந்தரகிரி கொண்டு கடைந்தார்கள், அப்படிக் கடைவதற்கு வடமாகிய பாம்பைத் தாம்பாகச் சுற்றினார்கள். கடைந்த பிறகு பாம்பைக் கழற்றி விட்டார்கள். அப்படிக் கழற்றியதைப் போல. காசின் சுடரொளி வலயம் தீர்ந்த: பதித்த ரத்தினங்களிலிருந்து பிரகாசம் வீசுவதான தோள்வளையம் கழற்றிய (இல்லாத); சுந்தரத் தோளினானை: அழகிய தோள்கொண்ட ராமனை—நோக்கி.]

⁂

மார்பும் தோளும் அப்படி: இனி முகம்.

பூரணச் சந்திரன் திரளான நிலவைத்தானே வீசும். ஆனால் ராமனது திருமுகமோ கருணையாகிய அமுதத்தையே பொழிகிறது.

கற்றைவெண் ணிலவுநீக் கிக்
கருணையாம் அமிழ்தம்கா லும்
முற்றுறு கலையிற்று ய
முழுமதி முகத்தினா னைப்;—
பெற்றவன் அளித்தமோ வி
இளையவன் பெறத்,தான்பெற் ற
(சிற்றவை பணித்த)மோ வி
பொலிகின்ற சென்னியா னை.

[கற்றை வெண்நிலவு நீக்கி: திரண்ட வெண் நிலவு பொழிதலை நீக்கி; கருணையாம் அமிழ்தம் காலும்: கருணையாகிய அமிழ்தத்தை வீசும்; முற்றுறு கலையிற்றுய: பூரண கலையைக் கொண்ட; முழுமதி முகத்தினானை: பூரணச் சந்திரனை ஒத்த முகத்தை உடைய ராமனை; பெற்றவன் அளித்த மோலி இளையவன் பெற: தந்தையாகிய தசரதன் முதலில் தனக்கு அளித்த கிரீடத்தைத் தம்பி பரதன் பெறவும்; தான் பெற்ற: தனக்கென்று பெற்றுக் கொண்ட; (சிற்றவை பணித்த: கைகேயி கட்டளையிட்ட); மோலி பொலிகின்ற சென்னியானை: சடையாகிய கிரீடம் விளங்குகிற சிரசை உடையவனாகிய ராமனை.]

குறிப்பு :—பொன் முடியை விட ராமனது சடை அதிகமாகப் பிரகாசித்து அழகு செய்கிறது விபீஷணனது கண்ணுக்கு.]

* * *

மேலேயுள்ள இரண்டு செய்யுள்களும் விபீஷணனது உள்ளத்திலே பிறந்த ஆனந்தமும் வியப்பும் அபரிமிதமான வேகத்தோடு பொங்கிப் பொங்கி எழுகின்றன. அந்த வேகமானது கடைசியாக 'வீரனை நோக்கி' என்று சொல்லுவதில் முடிகிறது.

ராமனைப் பார்த்த மாத்திரத்தில் தேகம் புளகிக்கிறது விபீஷணனுக்கு. கண்ணீர் பொழிகிறது. இதயம் அப்படியே உருகுகிறது.

மறுபடியும் வியப்பு மேலிடுகிறது.

**வீரனை நோக்கிஅங் கம்**
**மென்மயிர் சிலிர்ப்பக்கண் ணீர்**
**வார,நெஞ் சுருகி'செங் கண்**
**அஞ்சன மலை,அன்று இல்,—**
**கார்முகில் கமலம்பூத் த(து)**
**அன்று இல்,— கண்ணன்கொல்**
**லாம் ;—**
**ஆரருள் சுரக்கும்தெய் வ**
**அறம்அது கரிதோ'என் றான்.**

**[வீரனை நோக்கி : ராமபிரானை நோக்கி : அங்கம் மென்மயிர் சிலிர்ப்ப : தேகம் புளகிக்க ; கண்ணீர் வார : கண்ணீர் பொழிய : நெஞ்சு உருகி : உள்ளம் இளகி ; செங்கண் அஞ்சனமலை : செங்கண்ணோடு கூடிய கருநிற மலைதான் இது ; அன்று இல் : கார்முகில் கமலம் பூத்தது : கருமேகத்தில் செந்தாமரை பூத்த காட்சிதானோ ; அன்று இல் : கண்ணன் கொல்லாம் : திருமால்தானோ இவ்வுருவம் ! வேறு என்னவாக இருக்கலாம் ; ஆரருள் சுரக்கும் தெய்வ அறம் அது : குறையாது கருணை பொழியும் தர்ம தேவதையானது ; கரிதோ என்றான் : கரிய நிறங்கொண்டதோ என்று வாய்விட்டு நன்றி யுணர்ச்சியை வாய்விட்டுக் கொட்டுகிறான்.]**

* * *

தன் கிரீடத்தின்மேல் கையை உயர்த்திக் கூப்பியவாறாக நடக்கிறான்.

பக்தியோடு விபீஷணன் பார்ப்பதை பார்த்தால் கல்லும் மரங்களுமே உருகிவிடும்.

**கரங்கள்மீச் சுமந்துசெல் லும்**
**கதிர்மணி முடியன்,கல் லும்**
**மரங்களும் உருகநோக் கும்**
**காதலன் ; கருணைவள் ளல்**
**இரங்கினன் நோக்குந்தோ றும்**
**இருநிலத்(து) இறைஞ்சுகின்**
**றான் ;—**
**வரங்களின் வாரிஅன் ன**
**தாளினை வந்துவீழ்ந் தான்.**

**[கதிர்மணி முடியன் : விபீஷணன் ; நோக்கும் காதலன் : பார்க்கிற பக்தனாய விபீஷணன் ; கருணைவள்ளல் இரங்கினன் நோக்கும் தோறும் : கருணை மூர்த்தியான ராமன் மனம் இளகியவனாய்ப் பார்க்கும் தோறும் ; இரு நிலத்து இறைஞ்சுகின்றான் : பூமியைத் தொட்டுத் தொட்டு வணங்குகிறான் ; கடைசியாக — வரங்களின் வாரி அன்ன தாளினை : சகல செல்வங்களையும் தன்னிடத்தே அடக்கியுள்ள வரம்பில்லாத சமுத்திரம் ஒத்த ராமனது திருவடியில் - ஓடிவந்து அப்படியே விழுந்தான்.]**

•

அப்படி விழுந்த விபீஷணனது அளவிலா அன்பைக் கண்டான் ராமன். வாய்விட்டுப் பேசுகிறான்.

**'குகனொடும் ஐவர் ஆனேம்**
**முன்பு,பின் குன்று சூழ்வான்**
**மகனொடும் அறுவர் ஆனேம் ;—**
**எம்முழை அன்பின்வந் த**
**அகன்அமர் காதல்ஐ ய**
**நின்னொடும் எழுவர் ஆனேம் ;—**
**புகலரும் கானம்தந் து**
**புதல்வரால்பொ லிந்தான்உந்**
**தை !**

**[குகனொடும் ஐவர் ஆனேம் முன்பு : நான்கு சகோதரர்களாய் இருந்த நாங்கள் முதல் முதலாக குகனோடு சேர்ந்து ஐந்து பேர் ஆனோம் ; பின் குன்று சூழ்வான் மகனொடும் அறுவர் ஆனேம் : பிறகு சூரியபுத்திரனை இந்தச் சுக்கிரீவனோடு சேர்ந்து ஆறு பேர் ஆனோம் ; குன்று சூழ்வான் : மேருகிரியை வலம் வரும சூரியன் ; கடைசியாக எம் உழை அன்பின் வந்த அகன் அமர் காதல் ஐய : ஆசையோடு எங்களை நாடி வந்து இதயத்தில் ஊன்றிய நீங்காப் பேரன்பு கொண்ட ஐயனே ; நின்னொடும் எழுவர் ஆனேம் : உன்னோடு சேர்ந்து ஏழு சகோதரர்கள் ஆய்விட்டோம் — பூர்வமாய் நால்வராய் இருந்த நாங்கள் ; ஆகவே புகலரும் கானம் தந்து : புகுந்து வாழ்தற்கு ஒவ்வாத காட்டை எனக்குத் தந்த காரணத்தினால் ; புதல்வரால் பொலிந்தான் உந்தை : மக்கட் பேறு அதிகமாகி விட்டது உன் தந்தையாகிய தசரதனுக்கு.]**

உண்மையான அன்பும் இரக்கமும் கவியில் அற்புதமாய் தொனிக்கின்றன.

விபீஷணன், ராமன், ஆகிய இரண்டு பாத்திரங்களும் மிக உயர்ந்த லக்ஷ்ய பாத்திரங்களாய்ப் பிரகாசிக்கின்றன.

கம்பரது சிருஷ்டிகளைப் பார்த்துப் பார்த்து வியந்துகொண்டே இருக்க வேண்டியதுதான் நாம்.

# காரிய சித்தி

## கவி ரவீந்திரநாத தாகூர்

தேவ லோகத்துக்கு நடையின்றிச் செல்ல வேண்டுமென்பது அவனுடைய எண்ணம். அதற்காக அவன் பாடுபட்டுச் சிரஞ்சீவி மந்திரத்தைக் கற்றுக் கொண்டான். காட்டினுள் தனிமையில் தவம் செய்து அவன் சித்தியடைய முயன்றான்.

காட்டின் ஓரத்தில் சுள்ளி பொறுக்கும் பெண் ஒருத்தி யிருந்தாள். அவள் அவனுக்காக அவ்வப்போது பழங்கள் கொண்டுவந்து தருவாள்; இலைத் தொன்னையில் அவனுக்கென்று நீர் முகர்ந்து வருவாள். அதை அருந்தி அவன் களைப்புத் தீருவான்.

நாட்கள் செல்லச் செல்ல அவனுடைய சாதனை கடினமாகியது. பழத்தை அவன் தொடுவதில்லை. பறவைகள் அவைகளைக் கொத்தித் தின்றுவிடும். இன்னும் சில மாதங்கள் சென்றபின், நீர் அருந்துவதையும் அவன் நிறுத்தி விட்டான்.

சுள்ளி பொறுக்கும் பெண், "இனி நான் என்ன செய்வது? என் பணிவிடைகள் யாவும் வீணாகின்றனவே!" என்று ஏங்கினாள். அதற்குப் பிறகு, அவள் மலர்கள் கொய்து, அவைகளைத், தபஸ்வியின் காலருகில் வைத்துச் செல்வாள். அது அவனுக்குத் தெரியாது. மத்தியான வேளைகளில் வெய்யில் எரிக்கும்போது, தன் தலைப்பை விரித்து, அவனுக்கு நிழல் அளித்தாள். ஆனால் அவனுக்கு வெய்யிலும், நிழலும் ஒன்றுதானே!

தேய்பிறை நாளில், முன்னிருள் கப்பிக் கொண்டு இருக்கும்போது, அவள் அங்கேயே கண் விழித்துக் காத்து நிற்பாள். தபஸ்விக்கு அச்சமில்லைதான்; என்றாலும் அவள் அங்கு ஏனோ நிற்பாள்.

★

இப்படியும் ஒவ்வொரு நாள் கடக்கும்.

அந்தப் பெண்ணைக் கண்டால் அவன் ஆதரவுடன், "எப்படி இருக்கிறாய்?" என்று கேட்பான்.

"எனக்கு சுக துக்கம் என்ன இருக்கிறது? ஆனால், உங்களுக்கு யாருமே உறவினர் கிடையாதா? அம்மா, தம்பி, தங்கை......!" என்று கேட்பான் அவன்.

"எல்லாரும் இருக்கிறார்கள். ஆனால் இருந்து என்ன பலன்? என்னை உயிருடன் வைத்திருக்க அவர்களால் ஆகாதே!"

"இந்த உயிர் நிலையற்றது: அதனால் தானே இந்தப் பாசம்!"

"ஆம், அந்த நிலையற்ற தன்மையை ஒழிக்கத்தான் நான் முயலுகிறேன். மனிதன் அமரனாக வேண்டும்..." அவன் தன் பாட்டில் என்னென்னவோ சொல்லிக் கொண்டு போவான். அவற்றின் பொருள் அவளுக்குத் தெரியாது. ஆனாலும், வானில் கருமுகில் கண்ட மயில்போல் ஆவலுடன் அவன் முகத்தையே நோக்கியிருப்பாள்.

அப்புறம், இன்னும் கொஞ்ச நாட்கள் சென்றன; தபஸ்வி கண்களையும் மூடிக் கொண்டான். அவனைப் பார்க்க முடிவ இல்லை. தனக்கும், தபஸ்விக்கும் இடையே உள்ள தூரம் லக்ஷம் யோசனை மைல்களுக்கும் மேலாகவே அவளுக்குத் தோன்றியது. அவனை இனி நெருங்கவே முடியாதா! இதை நினைத்ததும் அவள் விழிகளில் நீராக வடிந்தது. தினம் ஒரு தடவை வேனும், 'எப்படி இருக்கிறாய்?' என்று கேட்க மாட்டாரா? அதை யெண்ணியே வாழ்வைக் கழிக்கலாமே என்று ஏங்கினாள்.

★

வானுலகில் தேவராஜனுக்குச் செய்தி எட்டியது. மனிதன் ஸ்வர்க்கத்தை அடைய முயலுவது என்றால், தேவராஜனால் என்ன, இளிவடைய வேண்டியதுதானே! அசுரரானால், போரிடலாம். ஆனால், அவனோ மனிதன். தன் ஏழ்மையாலும், கஷ்டங்களினாலும், தேவரை வெல்லப் பார்க்கிறான். ஆகவே, இனி என்னசெய்வது என்று கவலை கொண்டான் தேவேந்திரன்.

அவன் மேனகையை அழைத்தான். அவளோ, "அரசே! தேவமாதை ஒரு மனிதனிடம் ஏவ எண்ணுகிறீர்களே! அவனை வெல்லக் கூடிய திறமை பூவுலகில்

அந்தச் சுள்ளி பொறுக்கும் பெண்ணிடமே இருக்கிறதே!" என்றான்.

"உண்மை; இது எனக்குத் தெரியாமல் போயிற்று" என்று ஆமோதித்து தேவராஜன் ஆறுதல் அடைந்தான்.

★

பங்குனியின் தென்றல்பட்டு மாதவிக்கொடி அரும்பெடுக்கிறது. அதேபோல், வசந்தவனத்தின் வாடை அந்தப் பெண்ணின் மேல்படவும், அவள் உள்ளமும் இனிமை பார்த்து வேதனைப்படத் தொடங்கியது. மலர் தோறும் அலையும் வண்டுபோல், அவள் விழிகள் நிலையின்றிப் பறந்தன.



சாதனையின் ஒரு பகுதி முடிவடைந்தது. அவன் ஆள் நடமாட்டமிராத மலைக்குகை ஒன்றை அடைய எண்ணிக் கண் விழித்தான். எதிரே நின்றாள் அந்தப் பெண். கருங்குழலில் சிவந்த அலரிப் பூங்கொத்தும், அணிந்திருந்த தும்பை நிறச் சேலையும் தபஸ்வியின் கண்களைக் கவர்ந்தன. அவன் தீட்டிய சித்திரமெனத் திகைத்து நின்றான்.

சற்றுப் பொறுத்து அவன், "நான் மலைக்குகைக்குச் செல்ல வேண்டுமே!" என்றான்.

"ஏன் சுவாமி?" என்றாள் அவள்.

"தவம் முடிய வேண்டுமல்லவா!"

"இனி தரிசனம் செய்யும் பாக்யம்கூட எனக்கு இல்லையா?" என்று கெஞ்சிக் கேட்டாள் அவள்.

தபஸ்வி இருக்கையில் அமர்ந்து வெகு நேரம் யோசனை செய்தான். கடைசியில், "நல்லது. உன் இஷ்டப்படியே ஆகட்டும்" என்றான் அவன்.

தன் வேண்டுகோளைத் தபஸ்வி தடையின்றி ஏற்றுக்கொண்டது, அவள் உள்ளத்தைக் கூர் வேல் கொண்டு தாக்குவது போலிருந்தது. "நானோ அற்பப் பெண். இருந்தும், என் சொல் அவ்வளவு திறமையுள்ளதா?" என்று அவள் வருந்தினாள். அன்றிரவு அவள் கண்களுக்கு உறக்கமே பிடிக்கவில்லை.

மறுநாள் காலை, அவள் பழங்கள் கொண்டு வந்தபோது, தபஸ்வி அவைகளைக் கை நீட்டிப் பெற்றுக் கொண்டான். இலைத் தொன்னையில் அவள் தந்த நீரையும் அருந்தினான். அவன் உள்ளம் சொல்லத் தெரியாத இன்பத்தில் ஆழ்ந்தது.

அவள் மெல்ல ஆற்றங்கரையில் வந்து நின்றாள். அன்றைய நிகழ்ச்சி அவளை ஏக்கத்தில் ஆழ்த்தியது. அவள் ஏன் ஏங்கினாளோ, அது யாருக்குத் தெரியும்?

மறு நாள் காலை அவள் தபஸ்வியை வணங்கி, "ஸ்வாமி, எனக்கு விடை தர வேண்டும்" என்றாள்.

"என்ன?"

"சுவாமி! நான் தங்களை விட்டு வெகு தூரம் சென்றுவிட எண்ணுகிறேன்"

"போய் வா. உன் சாதனை பலன் தரட்டும்" என்றான் தபஸ்வி.

★

ஒரு நாள் அவனுடைய தவம் முடிவுற்றது. தேவேந்திரன் பிரத்யக்ஷமாகி, "அமரர் உலகில் உனக்கு உரிமை உண்டு" என்றான்.

"அப்படியா! சந்தோஷம்! இனி அது எனக்குத் தேவையில்லை."

"உனக்கு வேறு என்ன வேண்டும்?" என்று வியப்புடன் கேட்டான் தேவராஜன்.

"காட்டில் சுள்ளி பொறுக்கும் அந்தப் பெண்தான்" என்று நிதானமாகப் பதில் அளித்தான் தபஸ்வி.

[தமிழ்ப் படுத்தியவர்: ரங்கநாத ஆத்ரேயன்]



“என்னப்பா! எங்கே இப்படி ‘பெனுருள்’ சுதிமாகப் புறப்பட்டாய்?”

“இன்றைக்குக் கணக்குப் பரீக்ஷை. ஜீயாவுக்குத்தான் கணக்கிலே ‘வீக்’ என்று உனக்குத் தெரியுமே!”



நாடிக்காரர்:—நீங்கள் என்ன கம்யூனிஸ்டா? சோஷலிஸ்டா?

குடுமிக்காரர்:— நான் இரண்டுமில்லை; டைப்பிஸ்ட்!



வாத்தியார்:— முதல் மகாயுத்தம் எப்பொழுது நடந்தது? சொல், பார்க்கலாம்.

பையன்:—போன செவ்வாய்க்கிழமை இரண்டாவது பீரியடிலே, ஸார்!



மாமா:— அழாதே என்று சொன்னால் கேட்க மாட்டே? பார்! இப்பொழுது பூச்சாண்டி வருவான்! உன்னைப் பிடித்துக் கொடுத்து விடுகிறேன்!

# அதிக பாதுகாப்பு அளிப்பவை

# Firestone

## பயர்ஸ்டோன்

## ஸூபர்-பலூன்கள்

ஏனெனில் பாதையில் சரியாகப் பொருந்தி ரஸ்தாவில் அகலமாகப் பதிந்து ஓடுவதற்காகவே செய்திருக்கும் பயர்ஸ்டோன் "ஸ்கிட்—ரெஸிஸ்டர்கள்" டயரில் அமைத்திருப்பதால் சருக்கிவிடாமல் மகத்தான பாதுகாப்பு அளிக்கிறது.




இன்று சிறந்தது - நாளை இன்னும் சிரேஷ்டமானது

Edited, Printed and Published by R. Krishnamurthy, at the "Kalki" Press
116-119, Sladens Gardens, Poonamallee High Road, Kilpauk, Madras

# படித்துப் பார்!

## வீட்டு வைத்தியர்

ஒரு ஏழைத் தொழிலாளி தன்னுடைய மனைவிக்கு வைத்தியம் செய்வதற்காக அவளை ஒரு டாக்டரிடம் அழைத்துக் கொண்டு போனான். டாக்டர் நோயாளியைப் பார்த்துவிட்டு, "ஊசி போட வேண்டும். அதற்குப் பத்து ரூபாய் ஆகும்" என்றார். வெகு நேரம் தயங்கிய பிறகு கணவனும் மனைவியும் அதற்கு ஒப்புக் கொண்டார்கள். ஆனால் டாக்டர் பத்து ரூபாயுடன் திருப்தி யடைந்துவிடுவாரா? "சும்மா ஊசி போட முடியாது. மயக்க மருந்து கொடுத்துத்தான் ஊசி போட வேண்டும். அதற்கு இன்னொரு பத்து ரூபாயாகும்" என்றார். இதைக் கேட்டதும் அந்த ஸ்திரீ அப்படியே மயக்கம் போட்டுக் கீழே விழுந்துவிட்டாள். அவளுடைய கணவன் டாக்டரைப் பார்த்து, "டாக்டர்! டாக்டர்! சீக்கிரம்! மயக்கம் தெளிவதற்குள் ஊசி போட்டுவிடுங்கள்" என்று பரபரப்பாகச் சொன்னானாம்.

டாக்டர் 'பில்'லைப் பற்றி இத்தகைய ஹாஸ்யத் துணுக்குகள் எத்தனையோ உண்டு. அவற்றிலிருந்து பொதுவாகத் தெரியும் ஒரு உண்மை என்னவென்றால், தற்போது வைத்திய உதவி பணக்காரர்களைத் தவிர மற்றவர்களுக்கு இலகுவில் கிடைக்கக் கூடிய முறையில் இல்லை. வியாதியைக் காட்டிலும் டாக்டரைக் கண்டுதான் அதிகமாக அஞ்சி நடுங்க வேண்டியதாக இருக்கிறது. ஆனால் அந்த அச்சத்தைப் போக்குவதற்காக, நல்லவேளையாக இன்னொரு டாக்டரே உதவிசெய்திருக்கிறார்.

தற்போது சென்னை சர்க்கார் சுகாதார மந்திரியாக இருக்கும் டாக்டர் டி. என்.எஸ். ராஜன் அவர்களைப் பற்றித் தமிழ் மக்கள் எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். தேசத் தொண்டிலே தலை நரைத்துப் போனவர். தேச விடுதலைக்காக வேண்டி எவ்வளவோ கஷ்ட நஷ்டங்களையும் பல முறை சிறைவாசத்தையும் அனுபவித்தவர். தேசத்துக்காக அவர் செய்த மேற்படி தொண்டுகளை யெல்லாம்விட மகத்தான தொண்டு ஒன்றை அவர் தமிழர்களுக்குச் செய்திருக்கிறார். அதுதான் அவர் எழுதிய வீட்டு வைத்தியர் என்ற புத்தகமாகும். எடுத்ததற் கெல்லாம் டாக்டர்களைத் தேடிக்கொண்டு போய் பணத்தைக் கொட்டிக் கஷ்டப்படுவதற்குப் பதிலாக, கிடைத்த பொருள்களை வைத்துக்கொண்டு மேற்படி நோய்களில் பலவற்றை ஆரம்பத்திலேயே எப்படிக் குணப்படுத்தி விடலாம் என்பதை டாக்டர் ராஜன் இந்த நூலில் அற்புதமாக விளக்கி எழுதியிருக்கிறார். மக்களுக்கு வரக்கூடிய நோய்கள் பெரும்பாலானவற்றை டாக்டர் ராஜன் இதில் விரிவாக ஆராய்ந்திருக்கிறார். நோய் வந்து, பிறகு அதை குணப்படுத்துவதற்குப் பதில் நோய் வாராமல் தடுக்க முன் ஜாக்கிரதையாக நாம் அனுசரிக்க வேண்டிய சுகாதார விதிகள் எவை என்பதையும், அவர் இதில் சொல்லி யிருக்கிறார். ஆண்டவன் அளித்திருக்கும் வியப்பு மிகுந்த இம்மனித உடம்பின் அமைப்பு எப்படி, அது எப்படி வேலை செய்கிறது என்பதையும் வெகு அழகாக எழுதியிருக்கிறார். கர்ப்பம், பிரசவம், சிசுசம்ரட்சணை முதலிய விஷயங்களைப் பற்றி இப்புத்தகத்தில் காணப்படும் பகுதிகள் நம் பெண் மக்கள் பலருக்கும் எவ்வளவோ உதவியாக விளங்கி, எத்தனையோ உயிர்களைக் காப்பாற்றக்கூடியவையாகும். வைத்திய சாஸ்திரத்தின் சாராம்சம் முழுவதையும் டாக்டர் ராஜன் இந்தப் புத்தகத்திற் கொடுக்க முயற்சி செய்திருக்கிறாரென்று கூறினால் அது மிகையாகாது. இவ்வரிய புத்தகம் இப்போது இரண்டாம் பதிப்பாக வெளிவந்திருப்பதில் அதிசயம் இல்லை.

கவர்னர் ஜெனரல் ராஜாஜி இந்தப் புத்தகத்துக்கு ஓர் அழகிய முகவுரை எழுதியிருக்கிறார். இந்தப் புத்தகத்தை எழுதிய டாக்டர் ராஜனுக்கும் இதை இவ்வளவு அழகாக வெளியிட்டுள்ள கலைமகள் காரியாலயத்தாருக்கும் தமிழ்நாடு மிகவும் கடமைப் பட்டிருக்கிறது. விலை ரூ. 6. பிரசுரம்: கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர், சென்னை.

## காந்திஜி நினைவு மலர்

கொஞ்ச காலத்துக்கு முன்பு டில்லி "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" காரியாலயத்தார் மகாத்மாஜியின் புகைப் படங்களில் முக்கியமான பலவற்றை ஒரு புத்தகமாகத் தொகுத்து, ஒவ்வொரு படத்துக்கும் கீழேயும் ஆங்கிலத்தில் விளக்கம் கொடுத்து வெளியிட்டிருந்தார்கள். அதை இப்போது சென்னை மெஸர்ஸ் லலிதா அன் கம்பெனி

யார் தமிழில் அழகாக வெளியிட்டிருக்கிறார்கள். மகாத்மாஜி பொக்கை வாயைத் திறந்துகொண்டு புன்னகை பொலிய வீற்றிருக்கும் காட்சி முகப்புப் படத்தை அலங்கரிக்கிறது. இதைத் தவிர, காந்திஜி ஜுஹு கடற்கரையில் உலாவுவது, ராட்டையில் நூற்பது, சாந்திநிகேதனில் குருதேவர் தாகூருடன் வீற்றிருப்பது, லார்ட் ஸ்டாபோர்ட் கிரிப்ஸுடன் பேசிக் கொண்டிருப்பது முதலிய படங்களும் உள்ளன. இறுதியில் அவருடைய அந்திம யாத்திரையையும் அதைப் பார்த்து கோடிக்கணக்கான மக்கள் கண்ணீர் வடிப்பதையும் விளக்கும் பல படங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. இவ்வரிய புகைப்படப் பொக்கிஷத்தின் விலை ரூ. 6—8—0. இதில் கிடைக்கும் லாபம் முழுவதும் காந்திஜி ஞாபகார்த்த நிதிக்கு அனுப்பப்படும் என்பதை அறியும் போது, ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பிரதி வாங்க வேண்டும் என்ற ஆசை தோன்றத்தான் செய்யும். விலாசம்: மெஸர்ஸ் லலிதா அண் கோ, 289, லிங்க செட்டித் தெரு, சென்னை.

### இளையான் முதலிய கதைகள்

ஹிந்தி பாஷைக்கும் ஹிந்தி இலக்கியத்துக்கும் புத்துயிர் கொடுத்தவர் பிரேம் சந்த். ஹிந்தியில் எண்ணிறந்த நாவல்களையும் சிறு கதைகளையும் எழுதிக் குவித்திருக்கிறார் அவர். ஹிந்தி பாஷைக்கு அருந் தொண்டாற்றிய அவர் ஆரம்பத்தில் உருதுவில்தான் கதைகள் எழுதி வந்தார் என்பது பலருக்குத் தெரியாது. பிரேம் சந்த் உருதுவில் எழுதிய சிறந்த சிறு கதைகள் பலவற்றைத் தொகுத்து, அவற்றைத் தமிழாக்கி யிருக்கிறார் ஸ்ரீ என். ரங்கநாத ராவ். ஏழைகளைக் கசக்கிப் பிழிந்து வட்டி வாங்கும் சேட் ஜானக் சந்த் கடைசியில் கொள்ளைக்காரர்களால் ஏமாற்றப்படுவதை 'நியாயப் போலீஸ்' என்னும் கதை அற்புதமாகச் சித்திரிக்கிறது. அதைப் போலவே பாக்கிக் கதைகள் ஏழும் ஒவ்வொரு சிறந்த கருத்தை அடிப்படையாகக் கொண்டு விளங்குகின்றன. நல்ல கதைப் புத்தகம். விலை ரூ. 2. பிரசுரம்: மூர்த்தி பிரசுராலயம், மதராஸ் 18.

---

# தேனீ பறந்தது

நாற்பது நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு தமிழ் நாட்டில் புத்தக வெளியீட்டாளர்கள் மிகவும் குறைவு. ஏதாவது ஒரு புத்தகத்தை ஆயிரம் பிரதிகள் வெளியிட்டால், அது விற்பனையாவதற்கு ஆயிரம் ஆண்டுகள் ஆகுமோ என்று பயப்படக்கூடிய காலமாக இருந்தது அது. அந்தக் காலத்திலேயே லாப நஷ்டத்தைப் பொருட்படுத்தாமல் பற்பல அருமையான புத்தகங்களைக் குறைந்த விலையில் அழகாக அச்சிட்டு வெளியிட்டு வந்தார் அல்லயன்ஸ் கம்பெனி சொந்தக்காரரான ஸ்ரீ குப்புசாமி ஐயர். தமிழ் நாட்டில் முதன் முதலில் வெளியான "விவேக சிந்தாமணி"க்கு அடுத்தபடியாகப் பிரசித்திப் பெற்றிருந்த "விவேக போதினி" என்னும் மாத சஞ்சிகையை நெடுங்காலம் அவர் நடத்தி வந்தார். "ஆரியமத உபாக்கியானம்" "ராமாயண வினா விடை" முதல் விஞ்ஞானம், பொருளாதாரம், தாவர சாஸ்திரம், இலக்கியம் முதலிய பற்பல துறைகளிலும் பற்பல புத்தகங்கள் வெளியிட்டார். இவ்விதம் தமிழ்த் தாய்க்கு அருந்தொண்டு புரிந்து வந்த ஸ்ரீ குப்புசாமி ஐயர் சென்ற மாதம் 23ல் தம்முடைய எழுபதாவது வயதில் காலமானார் என்ற செய்தியைக் கேட்டுப் பெரிதும் வருந்துகிறோம்.



ஸ்ரீ ஐயர் ஓய்வு ஒழிவில்லாமல் தேனீயைப்போலச் சுறு சுறுப்பாக எப்போதும் வேலை செய்துகொண்டே யிருப்பார். முதுமைப் பருவம் அவருடைய வேலைக்கு இடையூறாக இருந்ததே கிடையாது. வாழ்க்கை முழுவதும் உழைத்து உழைத்துக் களைத்துப்போன அவருக்கு ஓய்வு அளிக்கவேண்டும் என்பதற்காகத்தானோ என்னவோ ஆண்டவன் அவரைத் தம்மருகே அழைத்துக்கொண்டார். அவருடைய ஆன்மா சாந்தியடைவதாக!

## கடைசியாக
## நீங்கள் இப்போது உங்கள்
# ஓவல்டினை
## கஷ்டமின்றி வாங்கலாம்!

சில காலமாய் வியாபாரிகளிடம், அவர்களது வாடிக்கைக்காரர்களுக்கு விற்கப் போதுமான 'ஓவல்டின்' ஸ்டாக் இல்லை. இப்போது தேவையான சப்ளை கிடைத்திருப்பதால், உங்கள் வழக்கமான வியாபாரியிடம் சுலபமாக ஓவல்டின் வாங்கலாம்.

ருசிகரமான ஓவல்டின்தான் குடும்பத்திலுள்ள எல்லோருக்கும் சரியான பானம். அது நல்ல தூக்கமளித்து, குழந்தைகளுக்கும், கிழவர்களுக்கும், குழந்தை வளர்க்கும் தாய்மார்களுக்கும் அதிக வலுவூட்டுகிறது. அது பழுத்த பார்லி மால்டிலுள்ள வலுத்தரும் பொருள்களின் சத்து, பால் ஏட்டின் சத்து, விசேஷமாகத் தயாரிக்கப்பெற்ற கோகோ, உயர்ந்த இயற்கை பாஸ்பேட்ஸ் வைட்டமின்கள் முதலிய சத்துக்களின் சேர்க்கையால் ஏற்பட்ட தயாரிப்பு.

உங்கள் வியாபாரியை இன்றே "ஓவல்டின்" கேளுங்கள். ஆனால் இதர மாற்றுப்பொருள்களை உபயோகிக்காதீர்.

டிஸ்ட்ரிபியூட்டர்கள்:— கெஹராம்ஸ் ட்ரேடிங் கம்பெனி (இந்தியா) லிட்., த.பெ.நெ.1205, மதராஸ். பம்பாய், கராச்சி, கல்கத்தா, டில்லி. இங்கிலீஷ் & ஸ்காட்டிஷ் ஜாயிண்ட் கோவாபரேடிவ் ஹோல்சேல் சொஸைடி லிட்., கள்ளிக்கோட்டை (மலையாளக்கரை பிரதேசத்திற்கு)




## உங்கள் 'ஓவல்டினை' எப்படி சாப்பிடுவது

ருசியான ஓவல்டினை உஷ்ணமாகவோ அல்லது குளுமையாகவோ சாப்பிடலாம். உஷ்ணமாக இருப்பதாகத் தோன்றும்போது நீங்கள் ஓவல்டினை குளிர்ந்த முறையில் சாப்பிட்டுப் பாருங்கள். முக்கியமாக தேகப் பயிற்சிக்குப்பின் அது மிகவும் புத்துணர்ச்சியளிக்கும்.

0288




# 'ஜீவான்ஜன்'

சரீரத்தின் மேல் தடவி
தேய்ப்பதற்கும் ஆவியாக
சுவாசிப்பதற்கும்
உபயோகரமானது
ரஸாயனக் களிம்பு, மிருக
கொழுப்பு சேராதது

*தயாரிப்பவர்கள்*
ஜீவான்ஜன் லாபொரட்டரீஸ் லிட்
*மதராஸ்-14*




*ஸோல் ஏஜன்டுகள்*
கே.கே. பிள்ளை & கோ
*ராயப்பேட்டை, மதராஸ்-14*

**ஜீவான்ஜன்**

# இதய நோயா?

....என்ன செய்யவென்று கூறுவேன்



இவ்வுபாதைகள் அதி
கோரமானவை என்று நானறி
வேன். மிக அசாதாரணமாகவும்,
ஊணுக்குப் பின் வயிற்றில் அஜீர
ணம். உப்புச உணர்வுகளைத் தரும்
அமிலத்தின் சேர்க்கையாலேயே இவ்
வுபாதைகள் ஏற்படுகின்றன. விஷ
அமிலங்களுக்கு மாற்று, எப்போதும்
போல ஜீரண சக்தி யளிப்பது, என
உகந்த பிஸ்மாகை சிபார்சு
செய்கிறேன். 3 நிமிஷத்தில் வலி
இடைஞ்சலின்றி ஜீரணமாக உதவு
கிறது. இன்று பரீக்ஷியுங்கள்.

உங்களுக்கு வேண்டியது

**BISMAG**

எல்லா கெமிஸ்டுக
ளிடமும் ஸ்டோர்
களிலும் பவுடராக
வும் மாத்திரையாக
வும் கிடைக்கும்.

இந்தியாவுக்கு பூரண வினியோகஸ்தர்கள்:
ஜியாப்ரே மானர்ஸ் & கோ., லிட்.
பம்பாய்-கல்கத்தா-டெல்லி-மதராஸ்

REGD. NO. M. 4392

இன்னுமொரு சினிமா நட்சத்திரம்
டி. எ. ஜயலக்ஷ்மி
லக்ஸ் டாய்லட்
சோப்பின் புதிய
பரிமளத்தால்

வசியப்
படுத்தப்
பட்டார்




சினிமா நட்சத்திரங்களின்
அழகு தரும் சோப்

"நான் லக்ஸ்
டாய்லட் சோப்பின் ரம்மியமான
புதிய பரிமளத்தை மிகவும்
விரும்புகிறேன்" என்று கூறுகிறார்

LTS. 307-172 TM